# நூலக வளர்ச்சி மலர்

# 1981




## பெங்களூர்த் தமிழ்ச் சங்கம்

29/1, அண்ணாசாமி முதலியார் சாலை,
பெங்களூர்-560042.



# சங்கப் பணிகள்

| | | |
|---|---|---|
| தமிழ் வகுப்பு | — | கன்னட வகுப்பு |
| வாய்பாட்டு வகுப்பு | — | வீணை வகுப்பு |
| நாட்டிய வகுப்பு | — | தையல் வகுப்பு |
| யோகாசன வகுப்பு | — | கராத்தே வகுப்பு |
| தமிழ் கன்னடத் தேர்வுகள் | — | தமிழ்த் திருமணம் |
| விழாக்கள் | — | மாநாடுகள் |
| கருத்தரங்கம் | — | சொற்பொழிவு |
| அறிஞர் துறை | — | மகளிர் துறை |
| இளைஞர் துறை | — | படிப்பகம் |
| நூலகம் | — | திங்களிதழ் ஊற்று |
| பட்டி மன்றம் | — | கவியரங்கம் |

## கடந்த பல ஆண்டுகளில் கிடைத்த நன்கொடைகள்

| | | | |
|---|---|---|---|
| தமிழக அரசு | ரூ 75,000 | திரு. ஜே. கே. நாராயணன், | |
| கருநாடக அரசு | ரூ. 50,000 | திரு. ஜே. கே. சிங்காரவேல் | ரூ. 10,000 |
| மைய அரசு | ரூ. 50,000 | திரு. எம். வி. ஜெயராமன் | ரூ. 8,500 |
| கலைஞர். மு. கருணாநிதி | | நீலகிரி டைரி பாரம் | ரூ. 7,000 |
| தமிழக முதல்வர் நிதி | ரூ 50,000 | திரு. என். கிருஷ்ணன் | ரூ. 5,000 |
| சுந்தரமூர்த்தி அறநிறுவனம் | ரூ 32,000 | | |

கொடையுள்ளம் படைத்தோர் பலர் அன்போடு பல உதவிகளைச் செய்துள்ளனர்

# முன்னுரை

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் முப்பத்தொன்று ஆண்டுகளை முடித்திருக்கின்றது. சங்கம் தொடக்கிய காலத்திலிருந்து நூலகத்தை வளர்க்க வேண்டும் என்பது நமது அவாவாகும். தமிழன்பர்கள் தாங்கள் படித்த கதை, கட்டுரை கவிதை நூல்களை வழங்கினர். அலசூரில் தமிழ்ப்பணியாற்றிய பாரிதமிழ் மன்றம் நமது சங்கத்துடன் இணைந்த போது சங்க நூலகத்துக்குப் பல நூல்கள் கிடைத்தன. டாக்டர் மு. வரதராசனார் தாம் எழுதிய நூல்களை அன்பளிப்பாக வழங்கினார். 1971 ஆம் ஆண்டு முதல் நமது சங்கக் கட்டிடத்தில் நல்ல முறையில் வளரந் தொடங்கியது. சங்கம் ஆண்டு தோறும் கணிசமான தொகை ஒதுக்கி நூல்களை வாங்கியது. செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடுகளையும், சென்னைத் தமிழிசைச் சங்க வெளியீடு களையும் வழங்கினார்கள். திரு. பி. எம். திருநாரணன் அவர்கள் தமக்குத் தமிழறிவு ஊட்டிய தமிழாசிரியர் சுப்பிரமணிய சர்மா அவர்கள் தாம்படித்துக் குறிப்பெடுத்த நூல்களை இருப்புப் பேழையில் வைத்து நமது நூலகத்துக்குக் கொடுத்தார்கள். புலவர் புரவலர் ம. வெ. செயராமன் அவர்கள் நூல்களை அடுக்கி வைக்கப் பேழைகள் வாங்க ரூ. 8,500 வழங்கினார்கள். இவ்வாண்டு ரூ. 10,492-32 க்குப் பேழைகள் வாங்கப் பெற்றன. ரூ. 30,000 க்கு நல்ல நூல்கள் வாங்கப்பெற்றன. நூலக வளர்ச்சி மலர் வழியே ரூபாய் 5,000 கிடைத்தது. மலருக்குத் தங்கள் படைப்புக்களை வழங்கிய அறிஞர் பெருமக்களுக்கும் மலர் அச்சிடுங்கால் உதவிய புலவர் இராச இராசமாணிக்கனார் அவர்களுக்கும் விளம்பரம் தந்துதவியவர்கட்கும் சங்க நூலக வளர்ச்சிக்குப் பணி செய்தோர்க்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள் தமிழ்நாடு கல்வித்துறையின் சார்பில் இருநூறு நூல்களை நமது நூலகத்திற்கு வழங்கியதைப் பெரிதும் பாராட்டி நன்றி கூறுகிறோம். வணக்கம்.

பெங்களூர்.
20-3-81

க. சுப்பிரமணியன்
தலைவர்

செ. அரங்கநாயகம்
கல்வி அமைச்சர்

தலைமைச் செயலகம்
சென்னை-600 009

தேதி : 25—11—80

## வாழ்த்துச் செய்தி

தமிழரின் பண்பாட்டுச் சிறப்பினையும், கலைச் சிறப்பினையும் வெளியிடுகின்ற வகையில், பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் தொண்டாற்றி வருவது அறிந்து பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாக தமிழ் கன்னடம் இலக்கிய வகுப்புகளும், பல்வேறுவகை போட்டிகளும், சமூகப் பணிகளும் தமிழ்ச் சங்கம் நடத்தி வருவது ஓர் அரிய செயலாகும்

கல்வியின் கண் எனக் கருதப்படும் நூலகம் மேலும் வளர்ச்சி பெறவும், அது தொடர்பாக வெளிவரும் மலர் சிறப்புற அமையவும் நல்வாழ்த்துக்கள்.

அன்புள்ள
செ. அரங்கநாயகம்.



சங்க நூலகத்தில் முத்தமிழ்க் காவலர>

சங்கத்திற்கு விஜயம் செய்த அறிஞர் பெருமக்கள்






சங்கத்திற்கு விஜயம் செய்த அறிஞர் பெருமக்கள்





மாண்புமிகு அரங்கநாயகம் அவர்கள் நூலகத்தைப் பார்வையிடுதல்



நூலகம்



படிப்பகம்



மாநில யோகாசனப் போட்டியில் தங்கப் பதக்கம் பரிசு பெற்ற திரு. கோபால கிருஷ்ணா அவர்கள்



தையல் வகுப்பு





சங்கம் நடத்திய முதல் தமிழ் இலக்கிய மாநாடு




சாவி குழுவினருக்குப் பாராட்டு



திரு. எம். வி. செயராமன் அவர்கள் நூலக வளர்ச்சிக்கு ரூ. 8,000 வழங்கியபோது.



திரு. கார்த்திகேயன் (IGP) அவர்கள் கராத்தே வகுப்பைத் துவக்கிவைத்தல்



திரு. சுஜாதா அவர்களுக்குப் பாராட்டு



கன்னட வகுப்பு

தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்கள்
தமிழ் வகுப்பைத் தொடங்கி வைக்கிறார்கள்




நாட்டிய வதப்பு



கலை விழா



# சங்கக் கட்டிடம்











# என்ன வழி?

பேரா. டாக்டர் மா. நன்னன்,
எம். ஏ., பி. எச்டி,

"தமக்கென முயலாநோன்றாள் பிறர்க்கென முயலுநர் உண்மையான் உலகம் உண்டு" என ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த புறநானூற்றுப் புலவர் ஒருவர் கூறிய முடிவு தமிழ் அறிந்த எல்லார்க்கும் தெரிந்தவொன்றாகும். அப்புலவர் ஓர் அரிய உண்மையைக் கண்டு பிடித்து வியந்து உரைத்திருக்கிறார். இந்த உலகம் அழியாமல் இருப்பதற்கும், நிலையாக ஓங்கி வளர்வதற்கும் தன்னலமற்றுப் பிறர் நலத்திற்காகவே உழைக்கின்ற பெருமக்கள் இருப்பதுதான் காரணம் என்று அவர் கூறியிருக்கிறார். சங்க காலப்புலவர் ஒருவர் தமது பாடல் ஒன்றுக்கு இப்பொருளை அடிப்படையாகக் கொண்டிருக்கிறார் என்றால் அக்கருத்து மிகவும் அரியதாக இருக்கவேண்டும்; உலகத்திற்குப் பயன்படக் கூடியதாகவே இருக்கவேண்டும். அத்தகைய கருத்துகளைத்தான் சங்ககாலப் புலவர்கள் தங்களுடைய பாடல்களில் ஏற்றிப் பாடுவார்கள். அரியதாகவும், வியந்து பாராட்டுதற்குரியதாகவும் சங்க காலத்தில் இருந்த அந்நிலை இக்காலத் தில் எவ்வாறிருக்கிறதென்று எண்ணிப்பார்த்தால், நாம் வியக்கக்கூடிய அளவுக்கு உண்மை நேர் மாறாக இருப்பதைக் காணலாம். சங்க காலத்தில் தமக்கென வாழாது, பிறர்க்கென வாழ்கிற வர்கள் அரியவர்களாகக் காணப்பட்டிருக்கிறார்கள். ஆனால் இக்கால உலகில் சிறப்பாகத் தமிழகத்தில் (எல்லாருமே என்று சொல்லப்போதிய ஆதாரம் இன்மையால்) பெரும்பாலானவர்கள் தமக்கென வாழாது பிறர்க்கெனவே வாழும் பெற்றியராக இருக்கக் காண்கிறோம். தமக்காக வாழ்கிறவர்கள் மிகவும் அரியவர்களாகவே காணப்படுகிறார்கள். இக்கூற்று இதனைப் படிப் போர்க்கு வியப்பாகத் தோன்றலாம்; சங்க புலவர் அம்ம! என்னும் சொல்லைப் பயன்படுத்தி யதைப் போல் அல்லாமல் நீங்கள் அம்மவோ என்று மூக்கின்மேல் விரலை வைத்து வியக்கக் கூடியதாக இருக்கும்.

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்" என்று திருவள்ளுவர் கூறினார். செல்வத்துள் எல்லாம் என்றும் அழியாத பெருஞ்செல்வம் என்று 'நாலடியார்' கல்வியைக் குறிப்பிடுகிறது. இவ்வாறு கற்றும், கேட்டும் அறிகின்ற கல்விச் செல்வத்தை இன்றைய மக்கள் எதற்குப் பயன் படுத்துகிறார்கள் என்று ஆராய்ந்து பார்க்கும்போது (பொதுவாக எல்லாவற்றையும் ஆராயாமல்) கல்வி கேள்வி ஆகியவைகளால் மக்கள் பெறுகின்ற அறம், ஒழுக்கம், பண்பாடு, நாகரிகம் போன்ற செல்வங்களை அவர்கள் எதற்கு பயன்படுத்துவார்கள் என்று ஆராய்ந்து பார்த்தால் நான் மேலே கூறிய கருத்து எவ்வளவு சரியானது என்பதை நீங்கள் உணர்ந்து மூக்கின்மேல் வைத்த விரலை எடுத்து உங்கள் பின்தலையை சொறிந்துகொள்ள நேரும். அதாவது வியப்பு நீங்கி நாணமோ, கழிவிரக்கமோ உங்களுக்கு ஏற்படக்கூடும்.

அற உரை, பண்பாட்டுக் கருத்துகள், ஒழுக்க நெறிமுறைகள், நாகரிகக் கூறுகள் ஆகிய வற்றை கற்றும், கேட்டும் அறிகின்ற மக்கள் அவற்றை வாய்ப்புக் கிட்டும்போதெல்லாம் என்று இல்லாமல் வாய்ப்புக் கிடைக்காத போதும் வலிந்து அதனை ஏற்படுத்திக்கொண்டு மற்றவர் களுக்குத் தாம் திரட்டிய அச்செல்வததையெல்லாம் பேச்சுருவத்திலோ, எழுத்துருவத்திலோ

கைமாறு கருதாது வாரி வாரி வழங்குகிறார்கள். அந்த வள்ளல்கள் தமக்கென்று எதையும் வைத்துக்கொள்வதேயில்லை. முற்றும் துறந்த முனிவர்களாய் விளங்கும் அவர்கள் தாம் திரட்டிய, மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத, அக்கருத்துக்களை எல்லாம் பிறர்க்கு வழங்கியே தீர்க்கிறார்கள். மேலும் அவர்கள் அசசெல்வத்தைத் திரட்டுவதன் நோக்கமே தக்கார்க்கும், தகாதவர்க்கும் வேளாண்மை செய்வதற்காகவேயாகும். தாளாற்றித் தந்த அப்பொருளை யெல்லாம் இவ்வாறு வேளாண்மைக்கு மட்டுமே பயன்படுத்துகின்ற மக்களை அங்கிங்கெனாதபடி எங்கும் நாம் காணமுடிகிறது. அதனால்தான் சங்க காலத்துநிலை இன்று தலைகீழாக மாறி விட்டது என்று நான் தலைப்பிலே சொன்னேன் இது முழு உண்மையென்பதை இப்போது நீங்கள் முற்றிலும் ஏற்பீர்கள் என்று நம்புகிறேன்.

'கற்ற பின் நிற்க அதற்குத் தக' என்று வள்ளுவர் கூறியதற்கேற்ப மக்கள் நடந்து கொள்ளவில்லையென்பதை மேலே கண்டோம். அவ்வாறின்றி கற்ற கல்வியை முழுவதும் பயன் படுத்தி ஒழுக்கம் முதலியவற்றால் தமிழர்கள் உயர்ந்திருப்பார்களானால் இன்றைய தமிழர் வாழ்க்கை மிகமிக மேம்பட்டதாகவே இருந்திருக்கும். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே பண்பாடு முதலியவற்றில் தமிழர் சிறந்திருந்தார்கள் என்பதை நாம் உறுதியாக அறியமுடிகிறது. அவர்களுடைய இலக்கியமாயினும், வேளாண்மை முதலிய தொழிற்றுறையாயினும், கல்லணை போன்ற பொறியியல் துறையாயினும், அண்மையில் ஈரோட்டுக்கு அருகில் கண்டெடுக்கப்பட்ட தொழில்நுட்பம் வாய்ந்த அணிகலத் தொழில்கள் போன்றனவாயினும் அவற்றை உற்று நோக்கு வார்க்குத் தமிழர்கள் சில ஆயிரமாண்டுகளுக்கு முன்னாலேயே மிக உயர்ந்த நாகரிகம் உடைய வர்களாக வாழ்ந்திருந்தார்கள் என்பது தெரியவரும் அந்நாகரிகம் போன்றவற்றினுடைய வளர்ச்சி சரியாமலும், தேங்காமலும் தொடர்ந்து நிகழ்ந்து வந்திருக்குமாயின் இன்று தமிழர் களுடைய நிலை எவ்வளவோ மேம்பட்டதாக இருந்திருக்கும் அன்றோ ? அவ்வளர்ச்சி தேக்க முற்றதற்கும், சரிவுற்றதற்குமான காரணங்களில் சிறப்பானவொன்று தமிழர்கள் தம் அறிவைத் தம்மைச் செம்மைப்படுத்திக் கொள்வதில் செலவிடாமல், பிறருக்கு எடுத்துச் சொல்வதற்காக மட்டுமே செலவிட்டதுதான் என்று கருதுகிறேன்.

பொதுவாக மக்களும், சிறப்பாகத் தமிழர்களும் இவ்வாறு தமக்கென வாழாப் பிறர்க்குறி யாளராக மாறியதற்கு அடிப்படைக் காரணம் எதுவாக இருக்கமுடியுமென்று எண்ணினால், அது தமிழர்கள் இடைக்காலத்தில் ஏற்றுக்கொண்ட சமயங்களாகத்தான் இருக்கமுடியுமென்று தோன்றுகிறது. ஏனென்றால், சமயங்கள் சிறப்பாக இந்து சமயம் பக்திக்குக் கொடுக்கும் சிறப்பை ஒழுக்கம், பண்பாடு போன்றவற்றுக்குக் கொடுப்பதில்லை. அதற்கு ஆதாரம் சமயச் சார்பான கதைகளேயாகும் திருடினாலும், கொலை செய்தாலும், பிற ஒழுக்கக்கேடுகளில் மூழ்கினாலும் அவர்கள் பக்தர்களாக இருந்துவிட்டால் அவர்களைக் கடவுள் ஆதரித்து விடுபேறு அளித்ததாகத்தான் கதைகள் கூறுகின்றன பக்தியிருந்தால் பாவம் செய்பவன் தண்டிக்கப் படாமல் மன்னிக்கப்படுவதாகவே மதங்கள் கூறுகின்றன. ஆகவே எவ்வளவு குற்றங்கள் செய்தாலும் பக்தியும் பாவமன்னிப்பும் அவர்களை காப்பாற்றிவிடுமென்ற நம்பிக்கை இருப்பத னால் மக்களுக்குக் கற்றபின் அதற்குத் தக நிற்கவேண்டிய இன்றியமையாமை இல்லை இவ் வியல்பு மேலும் வளர்ந்து பல நல்ல செயல்கள். பல நல்ல பண்பாட்டு நாகரிகக் குறிகள் ஆகிய எல்லாம் பெரும் சடங்குகளாகவே போய்விட்டன. ஒருவன் தான் ஒழுக்கமுடையவனாக இருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை ; அதற்கு மாறாகக் குறிப்பிட்ட நாட்களில் குறிப்பிட்ட

கோயில்களுக்கு சென்றுவந்தால் போதும் ; இத்தனை முறை கடவுளின் பெயரை நினைத்தால் போதும் ; இந்த குளத்தில் மூழ்கினால் போதும் ; இன்னாருக்கு இன்னது கொடுத்தால் போதும் ; இதைக் கண்டால் போதும் ; அதைக் கேட்டால் போதும் ; இவற்றைப் படித்தால் போதும் என்னும் நிலைகள் இருப்பதால் மனிதன் உள்ளத்துக்கும் உரைக்கும் தொடர்பில்லாமலும், உரைக்கும் நடத்தைக்கும் தொடர்பில்லாமலும் வாழத் தொடங்கிவிட்டான். சமயங்கள் சடங்குகளை முழுமையாகக் கொண்டுவிட்ட காரணத்தினால் அச்சமய வாழ்க்கையை ஏற்றுக் கொண்ட மக்கள் தங்கள் வாழ்க்கை முழுவதையுமே சடங்குகளாக அமைத்துக்கொண்டு விடுகிறார்கள். ஆகவே வாழக்கையில் உண்மை ஒழுக்கத்திற்கோ, நல்ல பண்பாட்டிற்கோ இடமில்லாமல் போய்விட்டது.

இதனால்தான் மனிதனை மனிதனாகக் கருதிய தந்தை பெரியார் அவர்கள் ஒழுக்கத்திற்கு முதலிடம் கொடுத்தார். பக்தியை விட ஒழுக்கம் இன்றிமையாததென்று விளக்கினார். கடவுள் என்ற ஒருவர் இருந்து பக்தி இல்லாதவனைத் தண்டிப்பதுண்மையானால், பக்தி இல்லாத அவனுக்கு மட்டுமே கேடு ஏற்படமுடியும் ; ஒருவனுக்கு ஒழுக்கமில்லாமல் போகுமானால் அதனால் அவனுக்கு மட்டுமின்றி அவனைச் சேர்ந்த சமுதாயத்திற்கும் பெருங்கேடு ஏற்படும். ஆகவேதான் பக்தி போன்றவற்றை விட ஒழுக்கம் மக்கள் வாழ்க்கைக்கு இன்றிமையாததென்று தந்தை பெரியார் வற்புறுத்தினார். அவர் ஒழுக்கமென்று வரையறுத்துக் கூறியவொன்றை இங்கே சுட்டிக்காட்டுவது மிகவும் பொருத்தமென்று கருதுகிறேன். அதாவது ‘சொல்கிறபடி நடப்பதும், நடக்கிறபடி சொல்வதுமே ஒழுக்கமாகும்’ என்று அவர் கூறுகிறார்.

மக்களின் எண்ணத்திற்கும், சொல்லுக்கும், நடத்தைக்கும் ஒற்றுமை ஏற்பட்டு இந்த முக்கூட்டு ஒருமைப்பாடு ஏற்பட்டுவிடுமானால், அப்பொழுது மக்களினம் உண்மையான மக்களினமாகத் திகழும். இந்த நிலை இல்லாததனால்தான் நான் மேலே கூறியதுபோல மக்களினம், சிறப்பாகத் தமிழினம் வீழ்ச்சியுற்று வாழ்கிறது. இல்லாவிட்டால் வள்ளுவர் தோன்றி உலகப் பொதுமறையை வகுத்ததாகச் சொல்கிறோமே அவர் பிறந்த தமிழ்ச் சமுதாயம் இப்படிச் சீரழிந்து கிடக்குமா ? தமிழினம் மட்டுமேயல்லாமல் புத்தரும், இயேசுவும், நபியும் பிறந்து அறிவுரையும், அறவுரையும் வழங்கியுங்கூட இந்த உலக மன்பதை விலங்குகளிலும் கீழாக ஒன்றையொன்று அழித்துக்கொண்டு சீர்கெட்டு நிற்குமா ? புத்தரின் மொன்மொழிகளையும், இயேசுவின் அன்பு மொழிகளையும், நபியின் அறிவு மொழிகளையும் எல்லாவற்றிற்கும் மேலாக வள்ளுவரின் பொது மொழிகளையும் மக்கள் எல்லாரும் படிக்கிறார்கள் ; அவற்றைப் படித்து ஏராளமாகப் பேசுகிறார்கள் ; மலைப்போல் எழுதிக் குவிக்கிறார்கள் ; ஆனால் யார் பின்பற்றுகிறார்கள் ? அப்படிப் பட்டவர்களை காணமுடியவில்லையே ! ஆராய்ந்து பாத்தால் விரல்விட்டு எண்ணுவதற்குக் கூட ஆட்கள் கிடைக்கமாட்டார்கள் போலிருக்கிறதே ! என் செய்வது ? ஏக்கம் வருகிறது உள்ளம கலங்குகிறது, அறிவு நிலை தடுமாறுகிறது ; இருந்தாலும் அத்தளர்ச்சிக்கு இடங் கொடுக்காமல் உணர்ச்சியைச் சற்றுக்கீழே தாழ்த்திச் சிந்தனையை சற்று மேலே உயர்த்தி எண்ணிப்பார்க்க வேண்டுகிறேன். அப்படி எண்ணிப் பார்க்கும்போது இன்றைய மன்பதையைத் திருத்துவதற்கு என்ன வழி என்று எண்ணுகிறேன்.

எண்ணுகிற என் எண்ணத்தில் தோன்றுகிற ஒரு கருத்து உலக மக்கள் உயராமல் சீரழிவதற்குக் காரணம் அறிவின்மையோ அல்லது அறம் எது ? மறம் எது ? நல்லொழுக்கம

எது? தீயொழுக்கம் எது? பண்பாடு எது? பண்புகெட்ட நிலையெது? என்பனவற்றை அறியாமையோவன்று. சாலையில் குறுக்கேபோய் அடிபட்டுச் சாகிறார்களே, அவர்கள் சாலையின் குறுக்கே போனால் அடிபட நேருமென்று அறியாமையினாலா அப்படிச் செல்கிறார்கள்? இல்லை; இல்லவேயில்லை. இவ்வாறுதான் உலகத்தில் நடக்கின்ற தவறுகளுக்கெல்லாம் காரணம், அவை தவறுகள் என்பதை மக்கள் அறிந்துகொள்ளாமையன்று; பெரும்பாலானவர்கள் தாம் செய்வது தவறென்றறிந்தும் அவற்றைச் செய்கிறார்கள். எனவே இவர்களைத் திருத்துவதற்கு என்ன வழி? அறிவுரைகளோ, அறவுரைகளோ, பக்திப் போதனைகளோ, பிற விளம்பரங்களோ கருத்துப் பரப்பல்களோ பயன்படமாட்டா; முற்றிலும் பயன்படமாட்டா. அதற்கு ஒரே வழி தவறு செய்யும் வாய்ப்போ, தவறு செய்யும் தேவையோ இல்லாமல் செய்யவேண்டும். அந்நிலை வருகிறவரையில் அவ்வாய்ப்பும், தேவையும் குறைவதற்கேனும் நாம் வழி கண்டாகவேண்டும். இந்நிலை அடைவதற்கு மனிதனைச் சுயசிந்தனையுள்ள பகுத்தறிவாளனாக மாற்றவேண்டும். இம்மூன்று கட்டங்கள் அதாவது முதலில் மனிதனைச் சுயசிந்தனையுள்ள பகுத்தறிவாளனாக ஆக்குவது; அடுத்தநிலை மனிதனுக்குத் தவறு செய்யும் வாய்ப்பு, தவறு செய்யவேண்டிய தேவை ஆகியவற்றை முடிந்த அளவு குறைப்பது; மூன்றாவது நிலை தவறும் வாய்ப்போ, தவறு செய்யவேண்டிய தேவையோ அறவே இல்லாமல் ஒழித்துவிடுவது. இம்மூன்றும் நிறைவேறிவிட்டால் மனிதன் மனிதனாக ஆவான்.



# கல்விக் கண்





டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
எம்.ஏ., எம். லிட், பிஎச் டி.,
மொழித் துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5.

அரிதரிதாகிய மானிடப் பிறவியில் எய்தற்கரிய பேறுகள் பல. அவற்றில் கல்விச் செல்வம் தலையாய சில பேறுகளில் ஒன்றாகும். ஒருவன் வாழ்வு செம்மைப்பட உறுதுணையாக விளங்குவது கல்வியேயாகும். தொன்றுதொட்டே நம் முன்னோர் கல்விக்குப் பெருஞ்சிறப்பு தந்து வந்துள்ளமையினை அறியலாம். எனவே வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்துச் சென்ற வள்ளுவப் பெருந்தகையும், கல்வியின் சிறப்பைக் கவினுறக் கிளத்த 'கல்வி' என்றே ஓர் அதிகாரத்தினைத் தம் படைப்பாம் திருக்குறளில் அமைத்திருக்கக் காணலாம்.

## கல்விச் செல்வம்

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"

"கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்"

இவற்றால் கல்விச் செல்வத்தின் சிறப்பு இனிது விளக்கமுறும். மேலும் நாலடியார் என்னும் நூலில் கல்வியின் சிறப்பு பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது.

"குஞ்சி யழகும் கொடுத்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல — நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு"

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பிறிதொன்றான சிறுபஞ்சமூலமும் கல்விச் செல்வத்தின் கவின் சிறப்பினைப் பின்வருமாறு கூறும் :

"மயிர்வனப்பும் கண்கவரும் மார்பின் வனப்பும்
உகிர்வனப்பும் காதின் வனப்பும் — செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்குஇயைந்த
சொல்லின் வனப்பே வனப்பு"

பிற்கால நூலான நீதிநூல் விளக்கமும் கற்றார்க்குக் கல்வியே சிறந்த அணிகலம் என்று குறிப்பிடும்.

கல்வியினையும் இளம் வயதிலேயே கற்க வேண்டுமென்பது முன்னோர் கண்ட முடிவு. 'ஆடிப்பட்டம் தேடி விதை' என்றும், 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்றும் 'ஐந்தில்

வளையாதது ஐம்பதில் வளையுமா ?' என்றும் பழமொழிகள் எழுந்த நாட்டில் 'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து' என்றும் பழமொழி பிறந்துள்ளது கற்பதற்குரிய காலம் இளமைக் காலமே என்பது இதனால் பெறப்படுகின்றது. பழமொழிப் பாட்டு ஒன்றும் இதனை விளக்கும். சுங்க வரி செலுத்தவேண்டிய இடத்தைத் தாண்டி வண்டி கடந்துவிட்டால் வரி வாங்கமுடியாது. அதே போலவே தோணிக்காரனும் ஆற்றைக் கடந்தபிறகு தோணியில் பயணம் செய்பவர்களிட மிருந்து கூலி வாங்குவது என்பது அவ்வளவாக இயலாத செயலாகும். இவை இரண்டைக் காட்டிலும் இளமைக் காலத்தில் கற்கவில்லையென்று சொன்னால் அந்தக் கல்வியை என்றும் பெறமுடியாது.

## கெடாத செல்வம் கல்வி

நாலடியார் பாடிய சமண முனிவர்கள் அறச்செல்வர்கள். நீதிநெறியினை நிலைக்கப் பாடியவர்கள். நாலடியினை நீதிநூல் களஞ்சியம் எனலாம். கல்வியின் பெருமையினை நாலடி யார் பின்வருமாறு மொழியும். கல்வி என்பது வைத்திருந்தால் கெடாது. தகுதியுடையவர் களுக்குத் தந்தால் கேடில்லை. அரசரால் கைப்பற்றப்பட முடியாதது. எனவே மனிதன் தன் பின்னோர்க்குக் கல்வி செல்வத்தையே நிலையான செல்வமாக வைக்கவேண்டுமென்று குறிப்பிடும்

"வைப்புழிக் கோட்படா வாய்த்தீயின் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்"
எச்சம்என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை மற்றல்ல பிற"

இதனைக் கல்லாடத்தாலும் பின்வருமாறு குறிப்பிடும்.

"கொள்ளுநர் கொள்ளக் குறையாது ஆதலின்
நிறைஉளம் நீங்காது உறைஅருள் ஆகியும்"

பிற்காலத்துப் புலவர் ஒருவர் கல்வி குறித்துப் பாடிய பாட்டு ஒன்று தனிப்பாடல் திரட்டில் காணப்படும். அப்பாட்டு எளிய தமிழில் அமைந்துள்ளது அப்பாட்டு வருமாறு ;

"வெள்ளத்தால் அழியாது; வெந்தணலால்
வேகாது ; வேந்த ராலும்
கொள்ளத்தான் முடியாது; கொடுத்தாலும்
நிறைவன்றிக் குறைவு றாது;
கள்ளர்க்கோ பயமில்லை; காவலுக்கு
மிகஎளிது; கல்வி யென்னும்
உள்ளபொருள் உள்ளிருக்கப் புறத்தேயோர்
பொருள்தேடி உழல்கின் றீரே".

பதினேழாம் நூற்றாண்டின் இணையில்லாப் புலவரான குமரகுருபரர் கல்விச் சிறப்பு குறித்துப் பாடிய நீதிநூல் விளக்கச் செய்யுள் ஒன்று மனங்கொளற்குரியது. ஆடையணிகள்

வெளி அழகு ஒன்றையே காட்டும். இவ்வுலக இன்பம் ஒன்றுக்கே உதவும். ஆனால் கல்வியோ இவ்வுலக வாழ்க்கையில் ஒருவன் அடையவேண்டிய பயன்கள் பலவற்றையும் கொடுக்கும். இறந்தபின்னும் புகழைக் கொடுக்கும். திருவள்ளுவர் கூறுமாப்போல்,

" ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்புடைத்து "

எனவே, மறுபிறவியிலும் மறுஉலகத்திலும் பயன் விளைக்கும். இவ்வாறு அறுவகைப் பயன்களை கல்வியால் பெறலாம் என்பதனைப் பின்வரும் செய்யுளால் அவர் உணர்த்துகிறார்.

" அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும் உறுங்கவலொன்
றுற்றுழியும் கைகொடுக்கும் கல்வியினூஉங் கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை "

## கல்விப் பாகன்

யானைக்குச் சிலகாலை மதம் பிடித்தல் உண்டு. மதம் பிடித்த யானை முறைதவறி நடக்கும். அப்போது யானைமேல் அமர்ந்துள்ள பாகன் அதன் நெற்றியில் அங்குசத்தால் குத்தி அடக்குவான். அதைப்போலவே ஆணவம் கொண்டு அலையும், முறை தவறி நடக்கும் மனிதனைத் திருத்தும் சிறப்பினை கல்வி பெற்றுள்ளது. வழுக்கு நிலத்தில் பயன்படும் கைத்தடியைப் போல் வாழ்வு நிலத்தில் வழுக்கி விழாமல் இருப்பதற்குக் கல்வி பெரிதும் தேவை. சிலப்பதிகாரம் இதனை,

" இடங்கழி நெஞ்சத்து இளமை யானை
கல்விப் பாகன் கையகப் படாஅது
ஒல்கா உள்ளத் தோடு மாயினும். " என்றும்,

மணிமேகலை

" கல்விப் பாகரிற் காப்புவலை யோட்டி "

என்றும் குறிப்பிடும்.

## அரசரும் செய்யும் அரிய சிறப்பு :

ஒரு வீட்டில் எத்தனையோ பிள்ளைகள் பிறக்கலாம் ஆனால் அரசரும் மதிக்கும் பெருவாழ்வு அக்குடியில் அறிவுடையவனாலேயே அமையும். இதனையே புறநானூறு,

" ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னா தவருள்
அறிவுடையோ னாறு அரசுஞ் செல்லும் "

என்று குறிப்பிடும். எனவே வயது குறைந்தாலும் கல்வி நிறைந்தால் அரசறிய வாழலாம

என்பது பெறப்படும். சில நேரங்களில் கொற்றவனைக் காட்டிலும் குற்றமறக் கற்றவருக்கே பெரும்புகழ் இப்பேருலகில் கிடைக்குமென்று "வாக்குண்டாம்" வனப்புற எடுத்து மொழியும் காரணம் மன்னனுக்குத் தான் ஆளும் நாட்டில் மட்டுமே சிறப்புண்டு. ஆனால் கற்றவனுக்கோ சென்றவிடமெல்லாம் சிறப்பு.

"மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் — மன்னற்குத்
தன்தேச மல்லாற் சிறப்பில்லை; கற்றோர்க்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு."

என்றும், பழமொழிச் செய்யுள் ஒன்றும் இக்கருத்தினைப் பிரிதொரு பெற்றியால் விளக்கி நிற்கும். கற்றவர் எந்த நாட்டிற்கு வேண்டுமானாலும் செல்லாம். அவர்களுக்கு எல்லா நாடும் உரிய நாடே. அவர்கள் சோற்றுக்கு அலையவேண்டியதில்லை. கட்டுச்சோறு கட்டிச் செல்ல வேண்டியதில்லை என்று குறிப்பிடும்.

"ஆற்றவும் கற்றார் அறிவுடையார் அஃதுடையார்
நாற்றிசையும் செல்லாத நாடில்லை - அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆயினால்
ஆற்றுணா வேண்டுவ தில்"

இதனைத் திருவள்ளுவர்,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு"

என்ற பாட்டில் புலப்படுத்தியுள்ளார்.

## கற்கும் முறை :

தாயன்பு உலகில் மேலான அன்பு. விலைகொடுத்து வாங்கமுடியாத அன்பு. தாயின் உள்ளத்தில் மணிவயிற்றில் பிறந்த மக்கள் அனைவரும் சமம். ஆனால் தாயைக் குடல் விளக்கம் செய்ய பிள்ளைகளே உலகினர் மதிக்க, அந்தத் தாயும் எல்லார்க்கும் நல்லவனாக, வேண்டியவனாக இருந்தாலும் சிறப்பாகக் கற்ற மைந்தனையே, கல்வியால் புகழ் பூத்து நிற்கும் செல்வனையே விரும்பி நிற்பாள். இதனை ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் தான் பாடிய புறப்பாடல் ஒன்றில் இனிதுறப் புலப்படுத்தியுள்ளார்.

"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்பு ஓரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும்மனந் திரியும்."

இப்பாட்டில் எப்பாடுபட்டாகிலும் கல்வி கற்கவேண்டுமென்பது புலனாகின்றது. கல்விச் சிறப்பு பற்றி மக்கள் இவ்வளவு அறிந்திருந்தும் கல்வி கற்காமல் தம் வாழ்நாளை வீணே கழிக்கின்றனர். நம் நாட்டில் படித்தவர் தொகை 40 விழுக்காட்டைக் கூட எட்டவில்லை என்ற இரங்கற்குரிய

நிலையில் இன்றும் உள்ளோம். படித்தறியா பாமரன் ஒருவனைக் கற்றறிந்த ஆசிரியர் அணுகி அவன் பிள்ளையாவது படிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஆனால் அம்மூடனோ "வேண்டா, வேண்டா. என் முன்னோர் தொழிலை என் பிள்ளை பார்க்கட்டும். ஏர் உழுதால் போதும். பிள்ளை படிக்கவேண்டா பிரம்படி படவேண்டா. புத்தகச் சுவடி தூக்கவேண்டா. எழுத்தாணி கொண்டு ஓலையில் எழுதி இளைத்துக் களைத்துப் போகவேண்டா. பெற்ற தாய்க்குப் பிள்ளையாக இருந்தால் அதுவே போதும்" என்று சொன்னானாம். இவ்வாறு தமிழகத்தில் முதல்முதலில் தமிழில் பாடநூலை எழுதி அருந்தொண்டாற்றிய காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் கூறுவார்.

"பிள்ளையும் படிக்க வேண்டா
பிரம்படி படவும் வேண்டா
சள்ளையாம் சுவடி தூக்கிச்
சங்கடப் படவும் வேண்டா
முள்ளெனும் ஊசி கொண்டு
முறியினில் எழுத வேண்டா
பிள்ளையென் றிருந்தால் போதும்
பெற்றவள் களிக்க என்றான்"

மற்றொரு அரிய காட்சி. இளமைக் காலத்தில் படிக்கும் வாய்ப்பு இல்லாமல் முதுமைக் காலத்தில் அதைப் பற்றி எண்ணி நைந்து ஒருவன் தன்னைப் படிக்கவைக்காமல் போன தந்தையை நொந்துகொண்டான். எவ்வாறு? "என் தந்தை என்னைப் பெற்றது எதற்காக? தனக்குக் கொள்ளி வைப்பதற்கும், தான் விட்டுச்சென்ற கடனை அடைப்பதற்குமே. யான் அடங்காமல் துள்ளித் திரிந்த காலத்தில் என் துடுக்கை அடக்கிப் பள்ளிக்கு அனுப்பி வைக்காமல் என்னைப் பாழாக்கிவிட்டுப் போனானே அவனை நான் இப்போது என்ன செய்யமுடியும்?" என்று நொந்து நைந்தானாம். அப்பாடல் வருமாறு:

"அள்ளிக் கொடுத்திடும் செம்பொனும்
ஆடையும் ஆதரவாய்க்
கொள்ளிக்கும் பட்ட கடனுக்குமே
என்னைக் குறித்த தல்லால்
துள்ளித் திரிகின்ற நாளையி
லேயென் துடுக்க டக்கிப்
பள்ளிக்கு வைத்திலனே தந்தை
யாகிய பாதகனே."

## கல்விக் கொடை

இருபதாம் நூற்றாண்டின் இணையிலாப் புலவர் பாரதியார் எல்லாத் தனித்தன்மையிலும் கல்வி வழங்குவதே - கல்விக் கொடையே - சிறப்பு வாய்ந்தது என்று மொழிந்துள்ளார்.

" இன்னறுங்கனிச் சோலைகள் செய்தல்,
இனிய நீர்த்தன் சுனைகள் இயற்றல்
அன்னச்சத்திரம் ஆயிரம் வைத்தல்,
ஆலயம்பதி னாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர்விளங்கி ஒளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம்கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல். "

அன்ன சத்திரங்கள் கட்டுதல், ஆலயங்கள் அமைத்தல் ஆகிய இந்த அருஞ்செயல்களிலும் ஒருவருக்கு எழுத்தறிவிக்கும் சீரிய பணியே சிறந்த பணி என்று குறிப்பிட்டுள்ளார்.

எனவே கற்க வேண்டும்; விடாது கற்கவேண்டும். கற்ற வழியில் நிற்கவேண்டும் கல்வி சிறந்த தமிழ்நாடு என்று சொன்ன பாரதியின் கூற்று விளக்கமுறவேண்டும்.



# ஆழ்வார் பாசுரங்களில் அகப்பொருள் தத்துவம்

□ □ □ □ □ □ □

பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்,
சென்னை - 40

பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் ஒன்பது வகையான தொடர்புகள் ஏற்பட்டுள்ளன என்று வைணவ தத்துவம் கூறுகின்றது. இவற்றுள் நாயக நாயகி பாவனையும் (தலைவன் தலைவி உறவு) ஒன்றாகும். இந்த உறவே ஏனையவற்றுள் சிறந்தது; உயிராயது இந்த முறையில் பரமான்மாவைத் தலைவனாகவும் சீவான்மாவைத் தலைவியாகவும் வைத்து விளக்கும் பாசுரங்களை நாலாயிரத்தில் காணலாம். வைணவப் பெருமக்கள் சங்க கால நெறியையொட்டி ஓர் அசல் பொருள் தத்துவத்தை அமைத்துக் காட்டிய பெருமையினைப் பெற்றனர். புருடோத்த மனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன்னர் உலகிலுள்ள ஆன்மாக்கள் யாவும் பெண் தன்மையினை அடைந்து நிற்கும் என்பது அவர்கள் கண்ட தத்துவமாகும். எனவே ஆழ்வார்கள் குறிப்பாக நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பெண் தன்மை எய்திப்பல திருக்கோயில் மூர்த்தி களை அனுபவித்ததை அவர்களுடைய திருப்பாசுரங்களில் கண்டு மகிழலாம்.

வைணவர்களிடையே நிலவும் ஒரு மரபினை ஈண்டு நினைவு கூர்தற்பாலது. தண்ட காரண்ய முனிவர்கள் இராமபிரானின் பேரழகில் ஈடுபட்டுப் பெண்மையை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆய மங்கையர்களாகிக் கண்ணனைக் கூடினர் என்ற வழக்கு ஒன்றுண்டு. ஆனால் ஆழ்வார்கள் அப்படியின்றி அப்பொழுதே பெணமை நிலையை அடைந்து எம்பெருமானாகிய புருடோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர். நம்மாழ்வார் போன்ற ஞானச்செல்வர் களிடத்தில் சில சமயம் ஞானம் தலைதூக்கி நிற்கும்; சில சமயம் பிரேமம் (காதல்) தலைதூக்கி நிற்கும். இந்த இரண்டு நிலைகளிலிருக்கும் பொழுதும் அவர்கள் பாசுரங்கள் அருளியுள்ளனர். இதனை,

"ஞானத்தில் தம் பேச்சு;
பிரேமத்தில் பெண் பேச்சு" - 1

என்று 'ஆசாரிய ஹிருதயம்' என்ற நூல் குறிப்பிடும். அதாவது ஞான நிலையிலிருக்கும் பொழுது அவர்கள் தரமான தன்மையிலே நின்று பேசுவர். பிரேம நிலையை அடையும் பொழுது பிராட்டி நிலையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பெண் பேச்சாகப் பேசுவர். அப்பொழுது நம்மாழ்வாருக்குப் பராங்குசர் என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பராங்குச நாயகி' என்ற பெண்மைப் பெயரும், திருமங்கையாழ்வாருக்குப் 'பரகாலர்' என்ற ஆண்மைப் பெயர் நீங்கிப் 'பரகால நாயகி' என்ற பெண்மைப் பெயரும் வழங்கப்பெறும்.

---

1. ஆசாரிய ஹிருதயம் - 118

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அனுபவிக்கும் பொழுது அவர்கள் தோழி, தாய் தலைவி என்ற மூவரில் ஒருவரின் தன்மையைத் தாம் அடைந்து கூற்றுகள் நிகழ்த்துவர்.

"சம்பந்த உபாய பலங்களில் உணர்த்தி துணிவு பதற்றம் ஆகிய
பிரஜ்ஞாவஸ்தைகளுக்கு தோழி தாயார் மகள் என்று பேர்" - 2
[பிரஜ்ஞாவஸ்தை - மூன்று காலங்களையும் அறியும் அறிவின் நிலை]

என்று ஆசாரிய ஹிருதயமும் இங்ஙனம் மூன்று நிலைகளாக வடிவெடுக்கும் பாசுரங்கட்குத் தத்துவம் கூறுகின்றது. இந்த மூன்று நிலைகளையும் மூன்று பிரஜ்ஞாவஸ்தைகள் என்று விளக்கமும் தருகின்றது. அந்த விளக்கங்களைப் பின்னர்க் கூறுவோம்.

இங்ஙனம் ஆழ்வார்கள் பெண்மை நிலையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவிக்கும் பொழுது அவர்கள் பாசுரங்களும் தாய் சொல்லுவது போல் வடிவெடுத்துத் 'தாய்ப்பாசுரம்' என்று பெயர் பெறும்; தோழி சொல்வதுபோல் உருக்கொண்டு 'தோழிப் பாசுரம்' என்று திருநாமம் பெறும்; தலைவி பேசுவது போல் வடிவெடுத்து 'மகள் பாசுரம்' என்று வழங்கப் பெறும் இங்ஙனம் மூன்று வகையாகக் கூற்றுகள் நிகழ்ந்து பாசுரங்களில் வெளி வந்தாலும் பாசுரங்கள் பேசுகின்றவர்கள் ஆழ்வார்களேயாவர். இதனைப் பதிகங்கள் தோறும் வரும் பலசுருதிப் பாசுரங்களால் (திருக்கடைக் காப்பு செய்யுட்களால்) தெளிவாகும். திருவரங்கப் பெருமான் மீது தாய்ப் பாசுரமாக அருளிய பதிகத்தின்3 இறுதில் பாசுரத்தில் 'வண்குருகூர்ச் சடகோபன், முகில்வண்ணன் அடிமேல் சொன்ன சொல்மாலை ஆயிரத்துள் இப்பத்தும்' என்றும்; மலைநாட்டுத் திருமூழிக் களத்துறையும் எம்பெருமான் மீது மகள் பாசுரமாக அருளிய பதிகத்தின் திருக்கடைக் காப்புச் செய்யுளில் 'வண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்து உரைத்த அழிவு இல்லா ஆயிரத்துள் இப்பத்தும் என்றும்; மலைநாட்டுத் திருப்புலியூர் எம்பெருமான் மீது தொழில் பாசுரமாக 'அருளிய பதிகத்தின்'5 பல சுருதிப் பாசுரத்தில் 'தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் சொல், நேர்பட்ட தமிழ் மாலை ஆயிரத்துள் இப்பத்தும் என்றும்; கூறியிருப்பதனால் இதனை அறியலாம். ஏனைய திருவாய் மொழி அகப்பொருள் நுவலும் பாசுரங்களிலும் பெரிய திருமொழி அகப்பொருள் பாசுரங்களிலும் இதே போக்கு இருப்பதையும் கண்டு மகிழலாம். ஓர் ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்கு முக்கியமான பெயர் ஒன்றேயாக இருக்கும் என்பதை நாம்அறிவோம். அங்ஙனமே ஆழ்வாரது சொல் மாலைகள் மூன்று நிலைமைகளாக வழிந்து புறப்பட்டாலும், அவை ஆழ்வார்களது பாசுரங்களாகவே தலைக்காட்டி நிற்கும்.

எம்பெருமானைப் பற்றிக் கூறும் நூல்களில் 'திருவாய் மொழி'யும் ஒன்று என்பதை நாம் அறிவோம். இது 'திருமாலவன் கவி'-6 என்றும் சிறப்பிக்கப்பெறும். இந்நூலில் நம்மாழ்

---

2. ஷை - 133
3. திருவாய் 7.2 "கங்குலும் பகலும்"
4. திருவாய் 9.7 "எம் கானல் அகம்"
5. திருவாய் 8.9 "கருமாணிக்க மலைமேல்"
6. திருவிருத். 48

வார் எம்பெருமானை 100 பதிகங்களால் அநுபவித்து இனியராகின்றார். இவற்றுள் 73 பதிகங்கள் ஆழ்வார் தாமான தன்மையில் பேசியவை; 27 பதிகங்கள் பெண் பாவனையில் நின்று பேசியவை; பெண நிலையிலிருந்து பேசியவற்றுள் மகள் பாவனையில் பேசியவை 17 பதிகங்கள்; தாய் பாவனையில் பேசியவை ஏழு பதிகங்கள்; தோழி நிலையிலிருந்து 3 பதிகங்கள். இந்த மூன்று நிலைகளும் 'ஞானாவஸ்தைகள்' என்னாமல் 'பிரஜ்ஞாவஸ்தைகள்' என்றது மூன்று விதமான நிலைகளும் இவருக்கு எல்லாக் காலங்களிலும் உண்டு என்னுமிடம் தோற்றுகைக்காக. திருவெட்டெழுத்தின் முப்பதப் பொருள் பற்றிய ஞானமும் இவர் திருவுள்ளத்தில் எப்பொழுதும் நிலைத்தேயன்றோ இருப்பது? பெரிய திருமொழியினுள் அகப்பொருள் நுவலும் திருமொழிகள் 23; திருநெடுந்தாண்டகத்தில் 2; மடல் 2; ஆகமொத்தம் 27 திருமொழிகள். இவற்றுள்ளும் தாய் பாவனையில் உள்ளவை 17; தோழி பாவனையில் ஒன்றுகூட இல்லை.

இங்ஙனம் மூன்று வகையாகச் செல்லும் பாசுரங்கட்கு விளக்கமும் கூறுகின்றது ஆசாரிய ஹிருதயம்7. வைணவ முறைப்படி மோட்சத்தை அடைய விரும்புபவர்கள் (முமுட்சுகள்) தெரிந்துகொள்ளவேண்டிய 'இரகசியங்கள்' 8 மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரம சுலோகம் என்பனவாகும். ஆன்மாவின் உண்மைச் சொரூபம் (Essential nature) இன்னதென்பதையும், அந்நிலைக்கேற்பச் சேதனன் விடவேண்டுவன இன்னதென்பதையும் பற்றவேண்டுவன இன்னதென்பதையும் தெரிவிப்பது திருமந்திரமாகும் இது தன்னை மனனம் செய்கின்றவர்கட்கு இரட்சகமாயிருத்தலின் 'மந்திரம்' எனத் திருநாமம் பெற்றது. இந்த மந்திரத்தின் தன்மையை அறிந்தவர்கட்கே ஏனைய துவயம், சரம சுலோகம் என்ற இருமந்திரங்களிலும் நுவலப்பெறும் உபாயங்களிலும் (Means) பலத்திலும் (Result) விருப்பம் ஏற்படும். இந்த மூன்று மந்திரங்களும் ஒன்றையொன்றை விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன. முதலில் உள்ள திருமந்திரத்தில் 'ஓம்', 'நம:' 'நாராயணாய' என்ற மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. இவற்றுள் 'ஓம்' என்ற சொல்லின் பொருளையே ஏனைய இரண்டு சொற்களும் நன்கு விரிவுபடுத்துகின்றன. இந்த இரண்டு சொற்களின் பொருளையே 'துவயம்' என்ற இரண்டாவது மந்திரம் விரிக்கின்றது.

மேற்குறிப்பிட்ட மூன்று பதங்களும் மூன்று சொற்களைச் சொல்லுகின்றன9 அவை சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் என்பன.10 அதாவது 'பிரணவம்' சேஷத்துவத்தையும் (பிறருக்கு அடிமையாயிருத்தலையும்) 'நமஸ்ஸு' பாரதந்திரத்தையும் (பரனுக்கு அல்லது பகவானுக்கு வசப்பட்டிருத்தலையும்). 'நாராயணாய' சேதனன் ஈசுவரனுக்குப் புரியவேண்டிய கைங்கரியத்தையும் (பகவானுடைய முக மலர்ச்சிக்கு ஊறுப்பான தொண்டுவகையும்) தெரிவிப்பனவாகும்.

மேலும், இவற்றுள் 'பிரணவம்' பிரிந்திருக்கும் நிலையில் 'அ', 'உ', 'ம' என்ற மூன்று எழுத்துக்களைக் கொண்டது இம்மூன்றுஎழுத்துக்களும் இருக்கு, யஜுர், சாமம் என்ற மூன்று

---

7. ஆசா - ஹிரு 134
8. இவற்றின் பெருமையை உணராதார் காதில் விழாதவாறு மறைக்கப்பெறுவதால் இவை 'இரகசியங்கள்' எனப்பட்டன.
9. முமுட்சுப்படி - 29
10. ஷை - 30

வேதங்களின் உயிர்நிலையான எழுத்துகளாகும். மூன்று எழுத்துகளும் மூன்று பதங்களாய் மூன்று பொருள்களைத் தெரிவிக்கும். அதாவது, அகாரம் பகவானையும், அதில் ஏறி மறைந்துள்ள வேற்றுமை சேஷத்துவத்தையும் (அடிமைத் தன்மையையும்), உகாரம் அந்த அடிமைத் தன்மையின் அநந்யார்ஹத்துவத்தையும் (மற்றவருக்கில்லாமல் ஈசுவரனுக்கே உரித்தாயிருத்தலையும்) மகாரம் ஞானவானாகிய சீவான்மாவையும் தெரிவிக்கின்றன.

திருவாய்மொழியில் தோழியின் கூற்றாக வரும் மூன்று பதிகங்களிலும் அநந்யார்ஹத்துவம் தெரியும். இதனை விளக்குவோம். தோழியின் பாசுரமாக வருபவை 'தீர்ப்பாரையாமினி' (4,6), 'துவளில் மணிமாடம்' (6-5), 'கருமாணிக்க மலை' (8-9) என்பவையாகும் இவற்றுள் முதல் பதிகம் 'வெறி விலக்கு' என்ற துறையில் அமைந்துள்ளது. தலைவிக்கு எம்பெருமானுடன் 'இயற்கைப் புணர்ச்சி' நடைபெற்று விடுகின்றது. பிறகு பிரிவு ஏற்படுகின்றது. இவள் நிலையைக் கண்டு தாய்மார்கள் இவள் நோயினையும் அஃது ஏற்பட்ட காரணத்தையும் அதற்குரிய மருந்தினையும் அறியாமல் வெறியாட்டெடுக்கின்றனர். தோழி, "இவளுக்கு ஏற்பட்ட நோய் எம்பெருமானால் ஏற்பட்டது; ஒவ்வொருவரும் நோன்பு நோற்றுப் பெறவேண்டியது. ஆகவே, சங்கு சக்கரம் ஒன்று இவள் கேட்குமாறு கூறுங்கள் (2); உலகேழும் விழுங்கி உமிழ்ந்திட்ட பெருந்தேவன் பேர் சொல்லுங்கள் (4); மாயப் பிரான்கழல் வாழ்த்துங்கள் (3). இந்நோய் ஏழ்மைப் பிறப்புக்கும் சேமம்; கண்ணபிரான் கழல் வாழ்த்துவதே இவள் உற்ற நோய்க்கு மருந்து" என்று கூறுகின்றாள். மேலும்,

இவளைப் பெரும்பரிசு இவ்வணங்கு
　　ஆடுதல்அன்று அந்தோ!
குவளைத் தடங்கண்ணும் கோவைச்
　　செவ்வாயும் பயந்தனள்;
கவளக் கடாக்களிறு அட்ட
　　பிரான்திரு நாமத்தால்
தவளப் பொடிக்கொண்டு நீர்இட்
　　டிடுமின்; தணியுமே-11

[பரிசு-மார்க்கம்; அணங்கு ஆடுதல் - வெறியாடுதல்; பயந்தனள் - நிறவேறுபாடு அடைந்தனள்; கவளம் - மதகரமான மருந்துகளைக் கவளம் கொண்டதாய்; கடா - மதம் பெற்றதான; அட்ட - தொலைத்த; தவளம் பொடி - பரிசுத்தமான பாத தூளி; இட்டிடுமின் - தூவுங்கள்; தணியும் - தீரும்.]

என்று சொல்லி வெறி விலக்குகின்றாள். "எம்பெருமானுடைய திருநாமத்தை உச்சரித்து வைணவர்களுடைய பாத தூளியைக் கொண்டுவந்து இவள்மேல் தூவுங்கள்" என்று உண்மையான பரிகாரத்தை எடுத்துக் காட்டுகின்றாள். தாய்மார்கள் தாங்கள் தொலைவில்லி மங்கலம் செல்லும்போது இவளையும் இட்டுச் சென்றனர்; இவள் அங்குப் புக்கவாறே எம்பெருமானின் கோல மேனியையும், திவ்யாபரணங்களையும், திவ்யாயுதங்களையும், நீர்வள நிலவளங்களையும்

---

1. திருவாய் - 4-6:5

கண்டு மெய்மறந்து வாய் வெருவுகின்ருள், மீண்டும் தாய்மாருடன் உறவு செய்துகொள்ளும் படியான நிலைமையும் இல்லையாயிற்று. தாய்மார்கள் தோழி பக்கல் வந்து இவளை மீட்கும் உபயாம் ஏதாவது உண்டோ? என்று வினவுகின்றனர். அதற்குத் தோழி, " இவள் தொலைவிலி மங்கலத்தைக் கனவிலும் காணாதபடி முன்பே செய்திருக்கவேண்டும். அது செய்யாதது மன்றி நீங்களே இவளைக் கொண்டுபோய் அகப்படுத்தி விட்டு இப்போது மீட்க வழி தேடினால் இது முடியுமோ ? 'இவளோடு நமக்கு உறவில்லை' என்று நசையற்று இருக்க வேண்டுவதன்றி வேறொன்றுண்டோ ?" என்கின்றாள். 'இவளை நீர் இனி அன்னை மீர உமக்கு ஆசை இல்லை விடுமினோ?', 'அமுத மொழியாளை நீர் உமக்கு ஆசையின்றி அகற்றினீர்', என்று கூறி தலைவிக்கு 'உபாயத்திலே உள்ள உறுதி'யை வெளிப்படுத்துகின்றாள்.12 அடுத்த மூன்றாவது பதிகம்13 அறத்தொடு நிலையைக் கூறுவது. தலைவிக்குக் குட்ட நாட்டுத் திருப்புலியூர் மாயப் பிரானுடன் கலவி நேரிட்டு விட்டதை அன்னைமாருக்குத் தோழி வெளியிடுகின்றாள். " தன் திருப்புலியூர், முனைவன் மூவுல காளியப்பன் திருவருள் மூழ்கினளே " என்பதாக, இப்படி இந்த மூன்று பதிகங்களாலும் "இவ்வுயிர் பிறதெய்வங்கட்கு அடிமைப்பட்டதுமன்று ; தனக்குத் தானே உரியதுமன்று ; பகவான் ஒருவனுக்கே உரியது " என்ற கருத்தாகிய 'அநந்யார்ஹசேஷத்துவம்' தெளிவாக விளங்குகின்றது

திருவாய் மொழியில் தாய்ப்பாசுரமாக நடப்பன ஏழு பதிகங்கள். இவற்றின் கருத்தினையும் விளக்குவோம் பெண் பிள்ளையைப் பெற்று வளர்ப்பவள் தாய். அப்பெண் தக்க வயதை அடைந்ததும், பேராண்மைக்கு இருப்பிடமாகவுள்ள எம்பெருமானிடம் கழி பெருங் காதலை யுடையவளாகின்றாள். இதனைத் திருத்தாயார் பேசுகின்றாள் ;

கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும் ;
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும் ;
தாமரைக் கண்என்றே தளரும் ;
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட் டென்றும் ;
இருநிலம் கைதுழா இருக்கும் ;
செங்கயல் பாய்நீர்த் திருவரங் கத்தாய் !
இவள்திறத்து என்செய்கின் றாயே ? 14
[ கங்குல்-இரவு ; கண்ண நீர் - கண்ணீர் ; இருநிலம் - பெரிய பூமி ]

இன்னொரு பதிகத்தில் திருத்தாயாரின் பேச்சு இது :
கோமள வான்கன்றைப் புல்கி
கோவிந்தன் மேய்த்தன என்னும் ;
போம்இள நாகத்தின் பின்போய்,
அவன்கிடக்கை ஈது என்றும் ;

---

12. திருவாய் - 6.5
13. திருவாய் - 8.9
14. திருவாய் - 7.2 : 1

ஆம்அளவு ஒன்றும் அறியேன் ;
அருவினை யாட்டியேன் பெற்ற
கோமள வல்லியை மாயோன்
மால்செய்து செய்கின்ற கூத்தே.

[கோமள - இளைய ; வான் - பெரிய ; போம் - விருப்பப்படி செலும் ; கிடக்கை – படுக்கை ; அருவினையாட்டி - அநுபவித்து முடிக்க அரிய பாபத்தை யுடையவளான நான் ; மால் - மயக்கி ; ஆம் அளவு - ஆகும் அளவு ]

இங்ஙனம் பதறும் தன் மகளைத் தடுத்து நிறுத்துகின்றாள் திருத்தாயார். தலைவனே தலைவி இருக்கும் இடத்திற்கு வரவேண்டும் என்பது நடைபெற வேண்டிய ஒழுங்குமுறை என்றும், அங்ஙனமின்றித் தலைவியே தலைவனிருக்கும் இடத்திற்குப் புறப்படுவது குலமரியாதைக்குச் சிறிதும் பொருந்துவதன்று என்றும் நினைக்கின்றாள் தாய். திருமந்திரத்தின் இரண்டாவது சொல்லாகிய 'நம': என்பது இந்நிலையைக் குறிக்கின்றது. இச்சொல்லை ந + ம : என்று இரண்டாகப் பிரிக்கலாம். இவ்விரண்டு எழுத்துக்களும் தனித்தனிப் பொருளைத் தருதலின் பதங்களாயின16. இவற்றுள் ஆறாம் வேற்றுமையுடன் கூடிய 'ம:' என்னும் பதம் 'சேதனன் ஈசுவரனுக்கே உரியன்' என இயம்பும் நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாய்த் தனக்குத் தான் உரியன்' என்னும் பொருளைக் கொடுக்கின்றது. ஆனால் 'ந' என்னும் பதமோ அதற்கு எதிர்மறைப் பொருளால் அதைத் தடுத்துத் 'தனக்கு தான் உரியனல்லன்' என்பதை அறிவிக்கின்றது 17 இதனால் 'நான் பிறனுக்கு (ஈசுவரனுக்கு) உரியவன் என்பது பெறப் படுகின்றது. இம்முறையில் இச்சொல் ஈசுவர பாரதந்திரியத்தைத் தெரிவிக்கின்றது. இன்னும் விளக்கிக் கூறினால், இச்சொல் ஞானத்தினால் ஏற்படும் சுதந்திரத் தன்மையை ஒழிக்கின்றது. அதன் காரணமாய் ஏற்படும் 'தன்னை தானே காத்துக்கொள்ள முடியும்' என்ற எண்ணத்தையும் நீக்குகின்றது. இனி, இவனைக் காத்து இரட்சிப்பவன் ஈசுவரனே ஆகின்றான் என்ற துணிவு பிறக்கின்றது. அதாவது, ஈசுவரனே உபாயம் என்ற பொருள் கிடைக்கின்றது இந்த மன நிலைதான் 'தாய்' என்று குறிக்கப்பெறுகின்றது. திருவாய் மொழியில் தாய் பாவனையில் பேசின எழு பதிகஙகளும்18 ஈசுவர பாரதந்திரியத்தையும், அவனே உபாயமாகின்றான் என்ற கருத்தையும் தெரிவிக்கின்றன. ஆகவே இவை உபாயத்தில் உறுதிபூண்டிருக்கும் நிலையிலே எழுந்த பேச்சுக்கள் என்பது தெளிவாகின்றது

மகள் பாகரமாக நடைபெறுகின்ற பதிகங்களின் உள்ளுறைப் பொருளையும் காண் போம் பெற்றோர் அல்லது உறவினர் கூட்டாமலேயே தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து தலைவனுடைய ஒப்புயர்வற்ற வனப்பு முதலியவற்றில் ஈடுபட்டு இருப்பவள் உன் மகள் ; குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது உயிர் வாழ்ந்திருக்க

---

15. திருவாய் - 4.4 : 5
16 முமுட்சுப்படி - 78
17. ஷை - 79, 80
18. திருவாய் - 2 4: 4 2; 4.4; 5 6; 6.6; 6.7; 7.2.

மாட்டேன்' என்னும் பதற்றத்தை உடையவள் இவள். காலக்கழிவை இவளால் சிறிதேனும் பொறுக்க முடிவதில்லை. பிரணவத்தாலும் நமஸ்ஸாலும் எல்லோருக்கும் சேஷியாய் (தலைவனாய்) சரண்யனாய் அறுதியிடப் பெற்றவன் எம்பெருமான். எல்லோருக்கும் புகலிடமாக இருப்பனும் இவனே. பிரணவத்தாலும் நமஸ்ஸாலும் இவை உணரப்பெற்ற பிறகு 'நாராயணாய' என்ற சொல்லினால் கூறப்பெற்றுள்ள சொரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின்-19 சேர்க்கையாலுள்ள பெருமையை நினைந்து மகிழ்பவள் இவள் தலைவி பேசுகின்றாள் :

என்நெஞ்சினால் நோக்கிக் காணீர்
என்னை முனியாதே ;
தென்நன் சோலைத் திருக்குறுங்குடி
நம்பியை நான் கண்டபின்
மின்னு நூலும், குண்டலமும்,
மார்பில் திருமறுவும்
மின்னு பூணும் நான்குதோளும்
வந்து எங்கும் நின்றிடுமே. 20

[நெஞ்சினால் - நெஞ்சைக் கொண்டு ; நோக்கி - அநுபவித்து ;
முனியாதே - சீறாமல் ; மறு - ஸ்ரீவச்சம்.]

இஃது உருவெளிப்பாடு கண்ட தலைவி தாயாரை மறுத்துறைக்கின்ற பாசுரம். இன்னொரு பாசுரத்தில் இவள் பேசுகின்றாள் :

கண்டதுவே கொண்டு எல்லோரும் கூடி
கார்க்கடல் வண்ணனொடு என்திறத்து
கொண்டு,அலர் தூற்றிற்று ; அதுமுதலாக்
கொண்டஎன் காதல்உரைக்கில் தோழீ !
மண்திணி ஞாலமும் ஏழ்கடலும்
நீள்விசும்பும் கழியப் பெரிதால் ;
தென்திரை சூழ்ந்துஅவன் வீற்றிருந்த
தென்திருப் பேரையில் சேர்வன்சென்றே.21

[கண்டதுவே - மேனி மாற்றங்கண்டு ; கார்கடல் – கருங்கல் ; அவர் - பழி]

---

19. சொரூபம் - ஈசுவரனுடைய 'தியா'னத்துவ சொரூபம் ; ரூபம் - பகவானுடைய திவ்விய மங்கள விக்கிரகம்; குணம் ஆன்மகுணம், விக்கிரக குணம்; ஆன்ம குணங்கள் - ஞானம் சக்தி முதலியன ; விக்கிரக குணம் – அழகு, மென்மை முதலியன ; விபூதி-நியமிக்கப்படும் பொருள் (ஐசுவரியம்)

20 திருவாய் – 5 5 : 2

21 திருவாய் - 7.3 : 8

அலர் எழுந்ததால் காதல் கங்கு கரையின்றிப் பெருகுவதால் அத்தாபந்திர எம்பெருமான் வீற்றிருக்கும் இடமான தென்திருப் பேரனையில் சென்று சேர்வதாகக் கூறுகின்றாள் தலைவி.

எம்பெருமான் சாத்திமோபாயமாக22 இருந்தால் தாம் செய்யும் சாதனங்கள் முடிவுற்ற பிறகே சாத்தியமாகின்ற பேறு கிடைக்கக்கூடும் என்று பொறுத்திருக்கலாம். ஆனால் அவனைத் தாமதித்து அநுபவிக்கக் காரணம் இல்லை; 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டையும் மீறித் தான் நினைத்த பேற்றினை உடனே பெறவேண்டும் என்ற பதற்றத்தை உடையவளாக இருக்கின்றாள் இவள். இந்த மனநிலைதான் 'மகள்' (தலைவி) என்று குறிப்பிடப்பெறுகின்றது. திருவாய் மொழியில் மகள் பாவனையில் பேசும் 17 பதிகங்களும்24 இந்த நிலையையே குறிக் கின்றன என்பதை இந்தப் பதிகங்களை ஊன்றிப் படிப்பதனால் அறியலாம்.

வேதாந்தங்களில் குறிப்பிடப்பெறும் பக்தி இங்ஙனம் ஆழ்வார்களிடம் காதல் முறையில் பரிணமித்து நிற்பதை அறிகின்றோம். இவர்கள் எம்பெருமான் மீது கொள்ளும் காமம், பகவத் விஷய காமம், என்று வழங்கப்பெறும். இங்ஙனம் இவர்கள் மாதவன் மீது கொள்ளும் காமம் மங்கையர் மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது. ஆயினும் சிற்றின்ப அநுபவ மாகிய காதலுக்குக் கூறப்பெறும் அகப் பொருள் துறைகள் யாவும் இந்த பகவத் விஷய காமத்திற்கும் கூறப்பெறும். சிற்றின்ப அநுபவத்திற்குக் கொங்கை முதலியன சாதனமாயிருப்பது போல பகவத் விஷயானுபவத்திற்குப் பரபக்தி25, பரஞானம்26, பரமபக்தி27 இவை இன்றியமை யாதனவாக இருப்பதால், அவையே கொங்கை முதலான சொற்களால் இவ்வாழ்வார்களின் அளிச் செயல்களில் கூறப்பெறுகின்றன என்று சமயச் சான்றோர் கொள்வர்.

காதல் சுவையின் தொடர்பு சிறிதுமின்றியே பக்திச் சுவையின் அடிப்படையாகவே பாசுரங்கள் அருளிச் செய்தல் கூடும். அங்ஙனமிருக்க, காதல் சுவையையும கலந்து பாசுரங்கள் அருளிச் செய்யப்பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன? உடல் நலத்திற்குக் காரணமான வேப்பிலை உருண்டையை உட்கொள்ள வேண்டியவர்கட்கு வெல்லத்தை வெளியிற் பூசிக் கொடுத்து உண்பிப்பது போலவும். கொயினா மாத்திரைகட்குச் சருக்கரைப் பாகு பூசி இனிப்புச் சுவையை உண்டாக்கித் தின்பிப்பது போலவும், சிற்றின்பம் கூறும் வகையால் பேரின்பத்தை நிலை நாட்டுகின்றனர் என்று பெரியோர்கள் பணிப்பர். இது கடையாய காமத்தினையுடைவர்கட்குக் காட்டப்பெறும் உத்தி முறையாக இறையனார் களவியலிலும் கூறப்பெற்றுள்ளமை ஈண்டு ஒப்பு நோக்கி உணர்தல் தகும்; ஆழ்வார்களின் முறுகிய பக்தி நிலையை உணர்த்துவதற்கேற்ற ஓர் இலக்கியமரபே இஃது என்று கொள்ளினும் இழுக்கில்லை என்க.

---

22. சாத்யோபாயம் - மக்களால் சாதித்துக்கொள்ளுகின்ற உபாயம். எ-டு. பக்தி.
23. சித்தோபாயம் - முன்னமே இருக்கும் உபாயம்; அதாவது இறைவனாகிய உபாயம்.
24. திருவாய் - 1.4; 2.1; 4.8; 5.3; 5.4; 5.5; 5.9; 6.1; 6.2; 6.8; 7.3; 7.7; 8.2; 9 5; 9.7; 9 9; 10 3.
25. பரபக்தி - எம்பெருமானை நேரில் காணவேண்டும் என்கின்ற ஆவல்
26. பரஞானம் – அவனை நேரில் காணல்
27. பரமபக்தி - பின்பு மேன்மேலும் இடையறாது அநுபவிக்கவேண்டும் என்னும் ஆவல் அன்றி யும் எம்பெருமானோடு கூடினபோது சுகிக்கும்படியாகவும் இருப்பது பரபக்தி. பகவானுடைய முழுமையான நேர் காட்சி பரஞானம். அவனுடைய அநுபவம் பெறாவிடில் நீரைவிட்டுப் பிரிந்த மீன்போல மூச்சு அடங்கும்படி இருத்தல் பரமபக்தி. இவ்வாறு நம் பண்டைய ஆசாரியர்கள் நிலைப்படுத்துவர்.

# "சிலம்பில் நிறம்"

- டாக்டர் தா. வே. வீராசாமி
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
அடையாறு, சென்னை-20

சிலப்பதிகார ஆசிரியர் நிறம் பற்றிய பல செய்திகளைத் தம் காப்பியத்தின் அகத்தே கூறியுள்ளார், இன்றைய நிலையில் கூறப்பெறும் நிறங்கள் அத்தனையும் அவர் காலத்தில் வழங்கப் பெறவில்லை. சான்றாக மஞ்சள் என்பது இன்று ஒரு நிறத்தைக் குறிக்கும் சொல்லாக நிறப் பெயர்களுள் கற்பித்து வருகிறோம் ஆயின் இக்காப்பியத்தில் மஞ்சள் என்பது கிழங்குள்ள செடியைக் குறிக்கும் சொல்லாகவே பயன்பட்டு வந்துள்ளது (10.74, 11.82)

வெயிலின் நிறம் கண்ணாற் பார்க்கப் பெறாத மெல்லிய இயல்புடையவர்களைப் பற்றிக் கூறும்போது வெயினிறர் என்ற கருத்து வெளிப்படுகிறது (10.66), எனினும் இன்று ஏழு நிறங்கள் வெயிலில் அமைந்துள்ளது என்பது போன்ற நிறமாலைக் கொள்கைகள் அன்று இருந்தது எனக் கொள்ளமுடியவில்லை. நீர்க்கு நிறமின்று என்பது பழைய மரபு செம்புலப் பெயனீரார் கருத்தும் 'நிலத்தின் இயல்பால் நீர் திரியும்' என்ற வள்ளுவர் கருத்தும் பழமரபு நெறி எனப் புலப்படினும் நீர்நிறக் காக்கை (10.116) என இளங்கோ அடிகள் கூறும்போது கடலின் கரிய நிறத்தை நீர்க்கு ஏற்றிக் கூறினாரோ எனக் கருதவேண்டியுள்ளது.

திருமுருகாற்றுப்படையில் வேறுபல் துகிலின் நுடங்கி அருவி ஒழுகுவதைக் காட்டும் நிறப்பாங்குணர்ச்சியுடன் நிறங்கிளர் அருவி எனக் கவிஞர் உரைப்பார் (24.13), இந்திரவில்லில் பல்வேறு நிறம் அழகுக்கு விருந்தாக இயற்கையில் கோலம் கொண்டிருந்ததைக் காட்டும வகையில் (24.2) புனைந்துரைப்பார். பல்வேறு நிறங்கள் கொண்ட நவமணிகளால் (3.116, 6.95-105) இயற்றிய நகர் நாகரிக ஆக்கப் பொருள்கள் பற்றிய அறிவும் இங்கு வெளிப்படும்.

இவற்றில் அடிகள் தம் காப்பியத்தின் அகத்தே வெண்மை, நீலம், பசுமை, கருமை, செம்மை ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளார். இதில் கருமை, செம்மை நிறங்களே தலையாயவை எனலாம். கருமையின் கீழ்ப் பசுமை, நீலம் ஆகிய இரண்டும் இணைய வாய்ப்புண்டு. பொன்னிறம் என்பது செம்மையின் ஒரு கூறாக அமைந்து பின்னர் மஞ்சள் எனப் பிரிவுற்றதாகக் கொள்ளலாம்.

நிறத்தைக் குறிக்கும் பல சொற்கள் சிலப்பதிகாரத்தில் காணப்பெறுகின்றன. கேழ் (6.96), நிறம் (2.53), வண்ணம் 3.63) வருணம் (14.90) போன்றவை நிறத்தை உணர்த்துவன. இவற்றில் நிறம் என்ற சொல்லே இப்பொருளில் பெரிதும் காணப்பெறுகின்றது. நிறத்தோடு தொடர்புடைய நுண்மைப் பொருளாம் அழகு (15.138), இயல்பு (27.147), ஒளி (4.37) ஆகியவை சுட்டப்பெறும். பருப்பொருளாக விளங்கும் வடிவும் (11.40) ஆக்கப் பொருளின் பெயரும் 5.13) குறிக்கப்பெறும்.

இவற்றின் அடிப்படையில் காணும்போது நிறம் அமைந்துள்ள வடிவம் என்ற காரண நிலை, பின்னர் அது வெளிப்படும் நெறி, வெளிப்பட்டு விளைவிக்கும் காரிய நிலை, நிறமாம் வண்ணம் என்ற பெயரே அதனைக் கொண்டுள்ள ஆக்கப் பொருளின் பெயர் (சாந்து) ஆகியவற்றைக் குறிக்கும் பாங்கினைச் சிலம்பு கொண்டு அறியலாம்.

வடமொழி எனக் கருதப்பெறும் வருணம் மிக அருகியே வழங்கப்பெற்றுள்ளது. இங்குக் குறிப்பிடத் தக்கது வண்ணம் என்ற சொல் சிலம்பில் குறிப்பிடப்பெற்றுள்ளதைக் காணும் போது அச்சொல் வர்ணம, வருணம் என ஆயது என்று கொள்ளுதற்கு இடமுண்டு.

இந்நிறங்களின் அடிப்படையில் வினைச் சொற்கள் சிலப்பதிகாரத்தில் காணப்பெறுகின்றன. மிகப்பேரளவில் செம்மையின் அடிப்படையிலும் / சிவந்த (5.84), சிவந்தனள் (30 41), சிவந்து (4.70), சிவப்ப (12.1.2) / பசுமையின் அடிப்படையிலும் / பசந்த (8 68) பசந்து (4.5) / மிகக் குறைவாகக் கருமையின் அடிப்படையிலும் (கறுத்த 12.1.57) காணப்பெறுவதால் செம்மை நிறம் உணர்வு வேறுபாட்டைச் சுட்டவும் தொழில்நிலையைக் காட்டவும், மாந்தர் மனநிலையை உணர்த்தவும் பயன்பட்டதை அறிகிறோம். மற்ற நிறங்கள் அவ்வாறு வினையாக்கம் பெறவில்லை. வெள்ளணி (14.95), செவ்வணி (27.29) போன்றவை முறையே அரசியல் இல்லறம் ஆகியவற்றில் நிகழும் சிறப்புகளை வெளிப்படுத்தின.

வெண்மை நிறம் சிலம்பில் சிவப்புக்கு அடுத்த நிலையில் பேரளவில் பயன்படுத்தப் பெற்றுள்ளது.

நெய்தல் நிலத்தில் காணும் பொருட்களாகிய உப்பு (5.25), வளை (26.72–3), முத்து (7.28), உணங்கல் (7.13) என்பவற்றை வெண்மை சுட்டியே உரைப்பார் ஆசிரியர்.

தாழை பனை ஆகியவற்றின் வெண்டோடு (16.35) போன்ற வன்பொருள்களிலும் மல்லிகையின் இதழ் போன்ற மென் பொருள்களிலும் விளங்கும் கூதாளத்திலும் (13.156) (2.33) வெண்மை தனியிடம் பெறுகிறது. வெள்ளரிக்காய் என வழங்கும் காயின் பெயர் சிலம்பில் வாலவரி கொடுங்காய். பாடவேறுபாடாகக் காணப்பெறுகிறது (16.25 /க பா. வே ) சிறு பாம்பு ஏறு ஆகியவற்றின் வெண் நிறச் சிறப்பு தனியிடம் பெறும் (12.22; 17.10)

கரிய யானையின் வெண்கோட்டால் கட்டில்கள் செய்தமைத்த நாகரிகம் வெளிப்பட யானைகள் நிறைந்துள்ள சேர நாட்டிலும் கீழைக் கடற்கரைச் சோழ நாட்டிலும் இருக்கும் கட்டில்களைக் குறிப்பிடும்போது அது விளங்கிய நிலை சுட்டப்பெறும் (6.170, 28.45). வாளிலும் வேலிலும் கூர்மையும் ஒண்மையும் புலப்பட வெள்வாள் (12.13, 16.213), வெள்வேல் (20.65) என வரும்

வெண்மணற் குன்றை வாலுகம் (6.131) என நெய்தலில் காட்டிப்பின் அதை ஒட்டி வெண் குன்றம் (24.8) என முருகன் விளங்கும் செய்குன்நினைக் காட்டும் நிலவின் பிறை வடிவிலும் (4.23) முழுவடிவிலும் (7.5), கதிரிலும் (13.17), வெண்மை பிரியா நிலைபெறுவதைக் காணலாம். வெண்மையை பாலுடன் பொருந்தக் காட்டுவது முல்லை நாகரிக விளைவாகும் (13.17, 13 27). கடலின் கருநிறத்தின் எதிரிடையாக விளங்கும் வெண்மை அதன் அலையின் தலையாக விளங்கும் முரணிலையை வெண்டலைப் புணரியில் (26.81) காணலாம்.

அரசர்க்கும் வெண்மைக்கும் உள்ள சிறப்பு அரசர்தம் வெண்குடை வாயிலாக நூல் முழுதும் வெளிப்படுகிறது. மூவேந்தர்களின் வெண்குடை சோழர் பாண்டியர் குடிகளைச் சுட்டும்போது சென்னி வெண்குடை (1.46), வெண்குடைப் பாண்டியன் (17.5) எனப் புலப்படும் சேரனின் வெண்குடை அவன்தன் ஆற்றலுரிமை வெளிப்பட அமையும் (26.8). அரசர்தம் வெண்குடைக்குப்பெரும் சிறப்பு அமைந்ததைக் காட்டும் வகையில் அரசனே வந்ததுபோல்

வெண்குடையின் புறப்பாடு மதிக்கப் பெற்றது (1.46). திங்களை வாழ்த்துதற்குரிய காரணம் அரசனின் வெண்குடை போலிருத்தல் எனச் சிலம்பின் தொடக்கத்தில் காட்டும்போதே புலப்படும் (1.2). அரசர்பிறந்த நாளில் வெள்ளணி ஒப்பனையால் வெண்மை பெற்ற சிறப்பை (27.229) மேலும் காணலாகும். அரசர் மற்றொரு அரசனைத் தோற்கடித்தபோது தோற்ற மன்னனின் வெண் குடைக்காம்பே தலைக்கோலாக அமைக்கப் பெற்றதும் வெண்குடைக்களித்த மதிப்புடன் வெளிப்படும் (3.115).

வெள்ளையானை என இந்திரனின் ஐராவதம் போற்றப் பெறுவதுடன் வெள்ளை என்ற சிறப்படை நீங்காமல் அமைகிறது (5.143,9.9). கருநிறக் கண்ணனின் அண்ணன் பலதேவன் வெள்ளை எனவே சிறப்பிக்கப்பெறும் கடவுளாவான் (9.10,13.9) அவனின் தூய வெள்ளை துலங்குமாறு வாலியோன் (5.171) எனக் குறிக்கப் பெறுவான்.

அந்தணர்க்குரிய நிறமாக வெண்மை கூறப்பெறுவதும் (14.13) அவர்தம் பல்லின் வெண்மையும் பால்புரை வெள்ளெயிற்றுப் பார்ப்பனக் கோலம் எனக் கூறப்பெறுவதும் சிலம்பு எழுந்த காலத்தில் அந்தணர் நிறம் உயர்நிலை பெற்றதை எடுத்துக்காட்டும்

ஆயின் வெள்ளை என்பது பயனற்றது என்ற வழக்கும் குறியீடாக இருந்ததை நூலின் இறுதியில் வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்' (30.198) எனக் கூறும்போது அறியப் பெறும். வெளியார், வான்சுதை வண்ணம் கொளல் என வள்ளுவர் குறிப்பிடும் நெறியாக இதனைக் கொள்ளமுடிகிறது. எனினும் சமுதாயத்தில் அந்தணர் நிறமாக வெள்ளை அமைந்ததையும், அரசர்தம் குடையிலும், அரசர் தாம் பிறந்தநாளில் கொண்ட கோலத்திலும் வெணமையின் சிறப்பைக் காண முடிகிறது.

வெண்மை என்பது தூய்மையின் குறியாக வால் (13.13) என்று காண்பதுடன் வெளிப் படையாக தூயநிற வெள்ளை (17.10) எனவும் வெளிப்படும்.

நீலநிறம் கொண்டு சற்று விரிவான செய்திகளை அறியமுடிகிறது

நீலம் என்ற பண்பைக் குறிக்க மணி என்ற சொல் பெரிதும் பயன்படுகிறது. பல்வகைப் பட்ட மணிகளில் நீலமணியை இது சுட்டுவதாக அமைகிறது. மணி வகைகளுள் ஒரு சாதியாக நீலம் அமைந்ததின் பயனாக இதனைக் கொள்ளலாம். மேலும் நீல வகையுள் ஒன்றாக இந்திர நீலம் (6.103) ஒளியின் அழகைச் சுட்டுதற்கு வெளிப்படுகிறது.

மலை, கடல் வானம், வானத்திலுள்ள மேகம், ஒருசில மாந்தரின் உடல், தலைமுடி ஆகியவற்றின் நிறத்தை அவ்வப்போது அவை தோற்றும் நிறத்தோற்றத்திற்கேற்ப நீல நிறமாகக் கவிஞர் கண்ணுக்குப் புலப்படுகின்றது. சான்றுகள் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| நீலகிரி | .... | 26.85 |
| கடல் (வண்ணன்) | .. | 17.26 |
| மணிவிசும்பு | .... | 24.9 |
| நீலமேகம் | .... | 11.35 |
| திருமணிபுரையும் மேனியன் | . | 22.97 |
| மணிக்குழல் | ... | 28.73 |

கருமை நீலம் என்ற இருநிறங்களின் செறிநிலை இங்குக் கருத்தில் கொள்ளப்பட்டதா என ஐயத்திற்குரியவண்ணம் நீலம் அமைந்துள்ளது.

குவளை (5.230) போன்ற இயற்கையில் பூத்த மலர்களும் நீலப் பறவை (24.15) எனச் சிறப்பாகச் சுட்டப்பெறும் மயில் போன்ற பறவைகளும் கடிப்பிணை (6.183) தோடு (8 112) ஆகிய நகைகளும், மேற்கட்டி போன்ற ஆடைகளும் (1 49) நீல நிறப் பொலிவுடன் விளங்கியதைச் சிறப்பாகக் கூறும்போது மற்ற நீலப் பறவைகளுக்கில்லாச் சிறப்பை மயிலுக்கு ஏற்றிக் கூறும் குறிஞ்சி மனமும் உணரத்தக்கது.

மாந்தர்தம் மேனி அழகை நீலநிறத்தில் கண்டதன்விளைவாக நீலன் (28.80) நீலி (23.159) எனப் பெயரிட்டு மகிழ்ந்த பழக்கத்தை அறிகிறோம். திருடர்கள் தங்கள் தொழில் புரிதற்கு உதவியாக உடலை மறைக்க நீல ஆடையே உடுத்த பழக்கத்தை இளங்கோ வெளிப்படுத்துகிறார் (16.204). இது மதுரைக் காஞ்சியில் கண்ட மரபு நெறி என்பதை உணரும்போது (639.42) நீலம் எவ்வாறு பயன்பட்டது என அறிகிறோம்.

தமிழகப் பகுதியில் மிக உயரமான மலைப் பகுதிக்கு நீலகிரி எனப் பெயரிட்டுப் போற்றியதைக் (26.8) காணும்போது உயர்மதிப்பைத் தூண்டும் நிறமாகவும் இருப்பதை உணர முடிகிறது.

இங்ஙனம் இயற்கைப் பொருள்கள் செயற்கைப் பொருள்கள் ஆகியவற்றில் நீலம் தனி இடம் பெற்றதைக் காட்டிலும் திணைநிலக் கடவுளரில் முல்லைநிலக் கடவுளாம் திருமாலை மணிவண்ணனாகவும் (10 10) பாலை நிறத் தெய்வமாம் கொற்றவையை நீலி (12,1 68) ஆகவும் பல இடங்களில் காண முடிகிறது.

மற்றப் பொருள்களில் காணும் நிறத்திற்கும் இத்தெய்வ வடிவங்களில் காணும் நிறத்திற்கும் உள்ள வேறுபாட்டை உணர்ந்து அந்நிறத்தில் தூய்மை கலந்திருப்பதைச் சிலம்பு காட்டும். (தூ மணிவண்ணன் 10.50)

இங்கு நீலம், கருமை என்ற இரண்டின் முழு வேறுபாட்டைப் பாகுபடுத்தியதாகக் காண முடியவில்லை.

மணிவகையில் நீலமணியின் நிறம் பெற்ற மதிப்பு பெருமதிப்பாகும். அக்கால நகர் வாழ்க்கையிலும் முடி ஆட்சியிலும் நீலமணிகள் பெற்ற சிறப்பு இதில் வெளிப்படும். மேலே கூறியதன்படி நிலத்தில் உயர்ந்த பகுதிக்கும் மக்களில் உயர்ந்தவர்க்கும் ஆண் பெண் வேறுபாடின்றி இந்நிறத்தின் பெயரிட்டுப் போற்றினர்.

திருட்டுத் தொழில் புரிவோர் தம்மை மறைத்தற்கு நீல ஆடையை உடுத்த செய்தி தொழில் தடையின்றி நடைபெறுதற்குரிய வகையில் ஆடையின் நிறத்தை ஆய்த்தெடுத்த திறம் வெளிப்படும்.

முல்லை, பாலை ஆகிய திணை நிலைத் தெய்வங்களிலும் நீலநிறம் சிறப்பிடம் பெற்றுளது. தாய்த் தெய்வமும் ஆண் தெய்வமும் இருபாலரும் தனித்தனியே தலைமை பெற்றுள்ள சமுதாயத்தைக் காட்டிலும் சமுதாய மாற்றத்திலும் நீலம் என்ற நிறம் தலைமையினின்று பிரிந்து மாற்றப்பெறவில்லை என்ற உண்மையைக் கொண்டு இருதிறப்பட்ட

சமுதாயத்திலும் நீலமணி மதிப்பிற்குரிய பொருளாக விளங்கியதும் கடல் மலை வானம் போன்ற இயற்கை நிறத் தோற்றத்தில் ஈடுபட்ட அழகுணர்ச்சிக்குரிய பண்பாக நீலம் விளங்கியதையும் சிலம்பால் அறியமுடிகிறது.

பசுமை நிறத்தைச் சிலப்பதிகாரத்தில் மிகக் குறைவாகவே காணமுடிகிறது. பச்சை என்ற சொல் வெளிப்படையாகக் காணப்பெறாவிடினும் பசும், பாசு, பைம் போன்ற அடியாக இந்நிறம் புலப்படுத்தப்பெறுகிறது.

இயற்கையாக அமைந்துள்ள தளிர், இலை, காய் போன்ற கெடி கொடியின் உறுப்பு களைச் சுட்டும் வகையில் அமைந்துள்ளது.

பைந்தளிர் (4.11)
பாசிலைப் போதி (10.1)
பாசிலைக் குருகு (13.52)
பாசிலை பொதுளிய மன்றம் (23.76)
மாதுளம் பசுங்காய் (16.25)
வளமான பயிரினங்கள் பசுமைநலம் கனியத்
தோன்றுவதைப் பைம்புனம் (24.23)

எனக் காணலாம்.

இவ்வியற்கையில் காணும் பசுமை நிறம் இலைவளர் நிலையில் முதிர்நிலை பெறுகிறது. இதனைச் சுட்டுவதாகப் பாசிலை என்ற தொடரைக் காண்பர் உரையாசிரியர். இளவேனிலில் செந்தளிராயது முதுவேனிற் காலத்தில் முற்றிப் பாசிலை ஆயிற்று எனக் காட்டும்போது முதிர் பசுமை பற்றிய குறிப்பு இங்கு வெளிப்படுகிறது. இதன் அடிப்படையில் பாசு என்பது மேலும் விளக்கம் தருதற்குத் துணைபுரியும்.

செயற்கையில் விளைத்த உலோகமாம் பொன்னின் நிறத்தைச் சுட்டும்போது பசும்பொன் என்பர். கலப்பற்ற பொன் என்ற பொருளில் இது பயன்படுகிறது. இப்பொன்னால் உருவாக்கிய பூரணகும்பம் (5.152), படாகை (5.154) போன்ற அக்கலினைப் பொருள்களின் அடையாக வுள்ளது, தொழில் நலம் வளர்ந்த காலத்தில் பொன்னிறத்தில் இளம்பசசையை இங்ஙனம் குறிக்க இது ஆளப்பெற்றுளது எனலாம்.

கிளிச்சிறை என்ற தொடர் பொன் வகையைக் குறித்தல் கொண்டு இவ்வகைப் பாகுபாடு வருதற்கு முன்னர்ப் பொதுமை ஆட்சியில் பசும்பொன் வந்துளது எனக்கொள்ள இடமுளது. புதுமை என்ற பொருள் கொள்ளுமாறு பசுந்துனிப் பிடர்த்தலை (20.24.5) போன்ற இடங்கள் வழி செய்யும்.

பசிய வளையல்கள் தலைமை தவம் பெற்றபெண்டிர் அணியாக பல இடங்களில் காணப்பெறுகின்றது. மாதவி (8.110)யைப் பற்றிக் கூறுமிடத்துப் பசுமைநிறத் தொடியைச் சுட்டுவதால் இல்லறத் தலைமை மட்டுமன்றிக் கலையுலகத் தலைமையையும் பைந்தொடியில் ஆசிரியர் மேற்கொண்டுள்ளார் எனத் தெரிகிறது

மணிமேகலை துறந்த நிலையில் இப் பைந்தொடி என்ற தொடர் அவள் பெருமையைச் சுட்டுகின்றது (30.35), பெரும்பாலும் காப்பியத் தலைவியாம் கண்ணகியைச் சுட்டவே இந்நிறம்

கொண்ட தொடி பயன்படுத்தப் பெறுவதால் தலைமை நலம் இத்துடன் இணைந்திருப்பதை அறியமுடிகிறது (9.67, 23.24, 152, 29.11).

மேலும் ஓரிடத்து கொற்றவை சிறப்பைக் கூறும்போது பைந்தொடிப்பாவை (12.1.70) எனப் பரவப்பெறுவாள். இதனால் இறைமை நலமும் இந்நலத்துடன் இணைகிறது.

பசுமை என்பது இயற்கை, செயற்கை என்ற பொருள்களின் பண்பைச் சுட்டும்போது பொது நிலையிலும் தலைமை மாந்தர் தெய்வம் ஆகியோர் பற்றி அணிநலம் குறிப்பிடும்போது வளையுடன் தொடர்புபூண்டு பசுமை பொலிந்து தலைமைநலம் காட்டிநிற்பதை உணர முடிகிறது. கருமை நிறத்தைச் சுட்டக்கறை (26.198), கார் (29.11), காழகம் (22.91), மணி (6. வெ ), (மா 25.1), மை (4.56, 6.108) போன்ற பல சொற்கள் சிலம்பில் பயன்பட்டுள்ளமை கொண்டு இந்நிற ஆட்சிச் சிறப்பு வெளிப்படும்.

சில மனிதரின் நிறத்தைக் கருமையாகக் காட்டுவதுடன் (12.15) அவர்தம் உறுப்புகளில் கருமை நிறம் கொண்டவற்றைச் சிறப்பாகக் காண முடிகிறது.

தலை (27.39)
ஆண் தலைமயிர் (19.35)
பெண்டிர் தலைமயிர் (கூந்தல்) (4.56)
ஓதி (6.108), புருவம் (2.45)
கண் (5.237)

பற்றி அறியும்போது கருங்கண்ணின் பெருமையே பலவிடங்களில் காணப்படுகிறது. ஆசிரியர் மற்றெல்லா உறுப்புகளிலும் கருங்கண் பற்றித் தனி ஆர்வம் காட்டுவது நன்கு வெளிப்படுகிறது.

கரிய நிறமுடைய யானையைக் கரிமா எனவும் (26.189) கருங் குரங்கினைக் கருவிரற் குரங்கு (15.159,208) எனவும் அவற்றின் நிறநலம் கூற வெளிப்படும். கரிய நிறமுடைய கரிக் குருவியையும் (12.12.4), காளையையும் (17. கொளு. 1) காரி என்ற பெயரிடும்போது உயிரினங்களுக்கும் பெயரிட்ட நிலையும் வள்ளல்கள் போன்ற சங்ககாலப் பெரிய மனிதர்களுள் சிலர்க்கும் இப்பெயரிட்ட நிலையும் நினைத்தற்குரியது.

செய்யும் தொழிலால் மாந்தர் கருமை நிறம் பெற்றதையும், கடின உடலுழைப்பால் அத்துடன் வலிமை சேர்ந்திருப்பதையும் காட்டும் வகையில் சிலம்பு,

கருங் கைக் கொல்லர் (5.29)
கருங்கை வினைஞர் (பள்ளர், பறையர்) (10.125)

ஆகியோர் பெருமை சுட்டும். உடலால் தொழில்புரிவோர் நிலை தாழ்ந்ததற்கேற்ப இந்நிறத்தின் பெருமைப் பொருளும் நாளடைவில் தாழ்ந்தது. கருமை என்ற நிறத்துடன் மக்கள் அன்றாடம் பயன்படுத்திய கருவிகள்,

கரிபுறவட்டில் (16.32)
காரகல ... விளக்கும் (6.138)
காரகில் (4.36)
குழல் (3.26) ஆகியவற்றிலும்

போர்க் கருவிகளான,

கருஞ்சிலை (28.18)

கறைத்தோல் (26.198)

ஆகியவற்றிலும் கருநிறம் வெளிப்படுமாறு காணலாம். குவளை மலரைக் கருங்குவளையாகவும் காட்டும்போது அதன் நெடுமையை மறவாது கூறுவதை அறியமுடிகிறது (5.150, 13 184).

கயல்மீனைக் கூறும் பல இடங்களிலும் கருமை இடம்பெற்றுக் காப்பிய மாந்தர், கருங் கண்ணுக்கு அணி செய்யும் காப்பிய நயம் இடைவிடாமல் பின்பற்றப்பெறுவது குறிப்பிடத் தக்கதாகும் (13.166, 7.25, 6.3, 6.174, 8,16, 118, 7.5, 16 94, 18.52).

கரியநிறம் நீலநிறத்துடன் வேறுபாடின்றி அஞ்சன வண்ணன், கரியவன் என்று திருமாலைச் சுட்டும் (6.47, 17.36). அதே சமயத்துச் சனியினைக் குறிக்கவும் கரியவன் (10.102) என்ற பெயர் பயன்படுகிறது. சனி மக்கட்குச் செய்யும் துன்பத்தை ஒலிக்க உதவும். ஆனால் திருமாலுக்கு இப்பெயரும் பழைய நெறியில் ஓரளவே பயன்பட்டு வரும் வழக்கையும் உணரமுடிகிறது.

இந்திர விழவூரெடுத்த காதையில் கண்ணகி கருங்கண்ணை மாதவி செங்கண்ணோடு இணைத்துக் காட்டும் காப்பியப் போக்கில் கருமையின் துன்பக் குறிப்பு வெளிப்படுகிறது. அதனால் கருங்கண் என்றது கண்ணகிக்கும் புணர்ச்சி யில்லாமையால் 'நிறைகரந்து துன்பத் தால் கண்கள் நீருகுத்தன' என அடியார்க்கு நல்லார் (5.237) குறிப்புப் பொருள் காணமுடிகிறது. மேலும் கருங்கைக் கொல்லர் (5.29) என்பதற்குப் பெருமை எனக் கருமைக்குரிய தொடக்க காலப் பொற்கொல்லன் கோவலன் கண்ணகி வாழ்விற்குக் கூற்றுவனாய் வந்த நிலையை உணர்ந்து அதற்கேற்ப கதையறிபொருளாகக் கருமைக்குப் பொருள் உறுமாற்றம் பெறுகிறது.

கருந்தொழிற் கொல்லன் என்ற தொடர்க்குக் கொலைத் தொழில் புரிந்த கொல்லன் (16.165) எனவும், கொலைத் தொழிற்கு அஞ்சாத பொற்கொல்லன் (16 202) எனவும் முன்னரே கொலைத் தொழிலில் அவன் நிலைத்தமையும், கோவலனைக் கொல்ல அஞ்சாத நிகழ்கால நிலையும் விளக்கும் வகையில் கதையறிபொருளைக் கருமை வாயிலாகக் காட்டுகிறது. உறுப்பு நலம் காட்டிவந்த கருநிறம் சிற்றுயிரினங்களும் மக்களும் காரி எனத் தம் பெயர் கொள்ளும் அளவு பெருமை பெற்றிருந்ததுடன் திருமாலின் பெயரும் அதனடிப்படையில் விளங்கியது.

ஆயினும் நீல நிறத்தின் பெருமை மணிவகைப் பெருமையாலும் கருநிற மக்கள் சமுதாய நிலையிலுற்ற சிறுமையாலும் கருமை என்பது துன்பக்குறிப்பைக் காட்டுவதுடன் கதைமாந்தர் உறுப்பின் நிற வாயிலாக அக்குறிப்பைப் புலப்படுத்துவதில் தனியிடம் பெற்று நிற்கிறது.

செம்மை நிறம் சிலம்பில் கையாளப்படாத காதையே இல்லை என்னும் அளவில் எல்லாக் கதைகளிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது. சிவத்தல் (5.84), செம் (19.30), செய் (6.61), செவ் (1.37), செக்கர் (21.47), அரத்தம் (22.46), துவர் (6.26), போன்றவை செம்மையைச் சுட்டி வருவன. செடி கொடிகளில் செம்மை நிறத்தைக் காணும்போது நீரிலே தெளிவாகச் செம்மை நிறத்தை வெளிக்காட்டும் பவளக்கொடி (14.198), பல்வேறு நல் மலர்கள் (செந்தாமரை 8 வெ) செங்கழுநீர் (4.64), செங்கூதாளம் (14.88), இலவம் (5.21.4). கார்காலத்தில் பூக்கும் செம்மலராம்

வேங்கை (12.3), செங்கோடு வேலி (14.91) ஆகியவற்றை நிற அழகுடன் உரைக்கிறார் இளங்கோ அடிகள். மேலும் முதிர்ந்துதிர்ந்த பழைய மலரைச் 'செம்மலர்' (7.39) என்றே காண்கிறோம். பலாப் பழத்தின் சுவைகளில் சில செந்நிறத்துடன் இருப்பதையும் நிறச்சுவையுடன் அமையும் (10.75). வயலில் விளையும் நெற்களில் சிறந்த நெல்லை செந்நெல் (7.37) என்பர்.

பறவைகளில் வெண்மையான அன்னத்தின் கால் சிவப்பாக எதிர் எதிர் நிலையில் சிறந்து விளங்குவதைக் குறிப்பது போல செங்கால் அன்னம் (10.115) என்று கூறும் புலன்கள் சிவந்தகண்ணின் சிறப்பை பெருமித விளங்கிய சிறப்பினை மறைக்காமல் கூறும்போது ஆன் (10.121), அரிமா (12.10) ஆகியவற்றைக் கொண்டு காண முடிகிறது.

மாந்தரின் உறுப்புகளில் கை (7.29), கண் (7.21), வாய் (7.28), இதழ் (6.26), அடி (4.47), சடை (28.70), மேனி (13.27) ஆகியவற்றின் செம்மை குலையாமல் கூறப்பெறும். சிறப்பாக மாந்தர் தம் உடம்பில் அமைந்த சாயலையும் (30.126), மேனியில் படர்ந்த சுணங்கையும் (7.45) செவ்வண்ணம் வெளிப்படுத்துகிறது. தீயின் வெம்மை தெரியச் செந்தீ எனக் கூறப் பெறுகிறது (22.148).

இயற்கை ஒளிக்கோலமாகிய கதிரவனைச் செஞ்சுடர் (22.17), செங்கதிர் ஞாயிறு (11.2), செங்கதிரோன் (19.32) எனப் பலவாறு போற்றப்படுவது கொண்டு கதிரவனோடு சிவப்புக் கொண்ட உறவுநிலை நன்கு புலப்படும். வான்மதியுடன் வெண்மை இணைந்தது போன்று கதிரவனுடன் செம்மை இயல்பாக இணைந்துள்ளது. அந்திவானத்தின் செக்கர் நிறம் கவிஞர் உளத்தை நன்கு கவர்ந்துளது (27.145; 21.47) என்பது பல இடங்களில் வெளிப்படுகிறது.

அரசர் நிறம் சிவப்பு என்ற நம்பிக்கையைக் குறிப்பாக உணர்ந்தாலும் (14.183 அரசன் சிவப்பு') அரசனின் ஆட்சி நல்ல ஆட்சி என்பதன் அறிகுறியாக அவர் பிடித்த கோல் செங்கோல் என்ற வழக்கு (7.3) மிகுதியாக மரபு வழியில் வருவதைச் சிலம்பும் ஏற்கிறது. இதில் மூவேந்தர் என்ற வேறுபாடு இங்குக் காணப் பெறவில்லை (7.3, 13.9, 22.5, 27.89)

சம நிலையைச் சுட்டும் வகையில் செந்நிலை (17.17) என்றும் காப்புடைய நிலையைக் காட்டும் வகையில் செந்நெறி (11.58) என்றும் நேரிய நிலையை உணர்த்தச் செம்மொழி (30.32) செம்முறை (3.76), செம்பகை (8.29) ஆகியவை முறையாக விளக்கம் பெறுகின்றன. நிறம். என்பது ஓரளவு மாறி நேர்மை, காப்பு, சமம் ஆகிய நற்பண்புகளை உடையது செம்மை என்ற பொருள் பெறுவதையும் இவற்றால் அறியமுடிகிறது.

அகத்திணை மரபில் செவ்வணி காட்டுதல் என்பது கூடலின்பம் குறித்து நிற்கும் அதனை உள்ளத்தும் கொண்ட கவிஞர்,

"வீழ்பூஞ் சேக்கை மேவினி திருந்தாங்
காத்தப் பூம்பட் டரைமிசை யுடீஇக்
குரற்றலைக் கூந்தற் குடசம் பொருந்திச்
சிறுமலைச் சிலம்பிற் செங்கூ தாளமொடு
நறுமலர்க் குறிஞ்சி நாண்மலர் வேய்ந்து

குங்கும வருணங் கொள்கையி னிழைத்துச்
செங்கோடு வேரிச் செழும்பூம் பிணையல்
சிந்துரச் சுண்ணஞ் சேர்ந்த மேனியில்
அந்துகிர்க் கோவை யணியொடு பூண்டு
மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்குக்
கலிகெழு கூடற் செவ்வலை காட்ட
(சிலம்பு 14.85-95)

எனக் கூறும்போது மருத நிலக் கடவுளாம் இந்திரனுக்கு மலர்கள் போன்ற பல இயற்கைப் பொருள்களின் துணைகொண்டு பூத்த செவ்வணி காட்டும் குறிப்புப் பொருளை உணரலாம். இத்தகைய செவ்வணி கண்ட காப்பியத் தலைமகனாம் கோவலன் பின்னர்க் கொலைக் களக் காதையில்,

" புண்ணுமிழ்க் குருதி பொழிந்துடன் பரப்ப
மண்ணக மடந்தை வான்துயர்
(சிலம்பு. 16. 214-15)

கூர்ந்த பிரிவுத் துன்பத்தை முன்னைய செவ்வணிக்கு முரண்பட்டுப் பிரிவுத் துன்பத்தில் காட்டப் பெறும் புதுச் செவ்வணி பூண்பதைச் சிலம்பால் அறிகிறோம். இவை காப்பியம் கூட்டும் நிறச் செவ்வியாகக் கொள்ளமுடியும்.

கடவுள் பல்லோருடைய நிறம் சிவப்பாக இருப்பதைச் சுட்டுதற்கு இக்காப்பியம் தவறவில்லை.

செவ்வேள் – முருகன் (1.37)
செய்யோள் – திருமகள் (6.61)
செங்கடவுள் – கதிரவன் (27.137)

எனக் காணும்போது சிறு தெய்வங்கட்கும் முதற்றெய்வங்களின் தலைவியோர்க்கும் சிவப்பால் பெறும் சிறப்பை அறியலாம்.

இயல்பாகக் கண்ணின் சிவந்த நிறத்தைச் சுட்டி அதனை உடைய திருமாலையும் (11.51) காமக் குறிப்புறதுபோல் காட்டி இந்திரனையும் (11.24) குறிப்பதுகொண்டு கடவுளரின் நிலைக்கு ஏற்ப செம்மை நிறம் குரிப்பை உணர்த்துமாறு உள்ளது. எனினும் செஞ்சடை வானவன் (26.98) என்ற இடத்தில் சிவனின் சடைக்குரிய செந்நிறத்தை இயல்புநிலையில் வெளிக்காட்டும்.

முருகனின் படை வீடுகளில் ஒன்றாக விளங்கும் செந்தில் என்பது செம்மை என்ற பண்புடன் இணைந்திருப்பதும் சிலம்பு வாயிலாக உணரமுடிகிறது (24.8).

செந்தன்மை நன்மையும், சில கடவுளர்க்குரிமை உடையதாகவும் காட்டிய கவிஞர் காப்பியத் தலைவியாம் கண்ணகியைச்,

சேயிழை கேள் (9.73)
சிலம்பின் வென்ற சேயிழை (22.135)
சிலம்பொடு சென்ற சேயிழை (25 72)
செயிருடன் வந்த இச்சேயிழை (25.108)
சிலம்பின் வென்றனள் சேயிழை (27.35)

காவற்பெண்டும், அடித் தோழியும் கடவுட் சாத்தனுடனுறைந்த தேவந்தியுமுடன் கூடிச் சேயிழையைக் காண்டும் என்று (29.1) கூறும்போது சேயிழை என்ற பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை அவளையே உணர்த்தி வருவதால் சிலம்பு போன்ற பல பொன்னிழைகளைக் கண்ணகி இழந்தாலும் செம்மை என்பது கற்பு சீறிய சினம், தெய்வம், நலம் ஆகிய பண்பின் அணியாகப் பொலிந்து விளங்குவதைச் சுட்டும்.

அத்துடன் இக்காப்பியம் 'கண்ணகி மகள்' என்று சிறப்பிக்கப்பெற்ற மணிமேகலை துறவு பூண்டு செம்மைநிலை பெற்றாள் என்பதை உணர்த்தும் வகையில் சேயிழை (30.32) எனக் கூறப்படுகிறாள்.

இதனால் செம்மை என்பது தலைவியர்க்குரிய பண்பாக அமைந்து காப்பியத் தலைவியையே பெரிதும் சுட்டி அவர்தம் கொடிவழியையும் சுட்டுவதாக அமையும் வகையில் இளங்கோ அடிகள் அமைத்துள்ளார் எனலாம்.

இத்தகைய நிறங்களின் தனி நிறம் மேலும் செறிவடைவதை உணர்த்தும் வகையில் தாமரைச் செங்கண் தழல் நிறம்கொள்ள (28.110) எனக் கூறுவார் ஆசிரியர் மேலும் ஒரு நிறம் காண்போர் உளத்தில் கிளர்ச்சியை உண்டாக்கும் என்பதை வெளிப்படுத்தும் வகையில் நிறங்கிளர் சீறடி நெய்தோய் தளிரின (30.20) என இளமகளின் உறுப்புநலன் காட்டுவதில் நிறக்கிளர்ச்சி புலப்படும்.

நிறங்கள் ஒன்றுடன் ஒன்று இணையாகக் காட்டும்போது காப்பிய அழகுணர்வு பன்மடங்கு பெருகுகின்றது. இளங்கோ அடிகள் நிறங்களை ஒன்று-ஒன்று என்ற நிலையில் கூறும்போது இயற்கைநிலை, செயல்நிலை, இல்லற நிலை, அரசியல் நிலை, செய்யுள் அணிநிலை என்ற பாங்கில் அமைத்துள்ளதைக் காண முடிகிறது.

வெண்மையைக் கருமை, சிவப்பு ஆகியவற்றுடனும் அதனை மற்றொரு வெண்மையுடனும் இணைக்கும்போது

வெண்மதி காரிருள் (10.2-4)
சங்குவளை பவளவளை (5.170-3)
வெண்குடை வெள்வளை (26.72-3)

இயற்கை நிலை தனியிடம் பெறுகிறது.

அருகிய நிலையில் பசுமை சிவப்பு உருவக நிலையில் இணைகின்றன (7-10). நீலம் கருமையுடனும் (7.26), செம்மையுடனும் (21.47) இணைகின்றன. இங்கும் இயற்கை நிலையே விஞ்சி நிற்கிறது.

செம்மை மற்றத் தனித்தனி நிறங்களுடன் இணைவது இக்காப்பியத்தில் மிகுதியாக வெளிப்படுகிறது.

செம்மை கருமை - செய்யகரியவன் (17.36)
செம்மை வெண்மை - அந்திவான் வெண்பிறை (4.23)
செம்மை பசுமை - செங்காலன்னம், பைங்கால் கொக்கு (10.115)

இந்நிலையில் இயற்கை நிலைக்கு அடுத்துச் செயல்நிலை இடம்பெறுகிறது.

இருநிறங்கள் போலவே மூன்று நிறங்களை இணைத்துக் காட்டும்போது உருவக நிலையே தனியிடம் பெறுகிறது.

| | |
|---|---|
| வெண்மை செம்மை செம்மை | (7.37) |
| வெண்மை செம்மை பசுமை | (7.38) |
| நீலம் செம்மை வெண்மை | (7.22) |
| நீலம் கருமை செம்மை | (7.25) |
| கருமை செம்மை வெண்மை | (17.6-10) |

ஆகியன அமைந்துள்ள பாங்கு கானல்வரி அகப்பாடலில் பண்டை இயற்கைப் பின்னணியில் அணிநயம் உருவகமாகப் புலப்படுகிறது. இது காப்பிய வளத்திற்கு வலிவூட்டும் பாங்காக அமைகிறது.

மலர்கள் தெய்வங்கள் பற்றிய நிறங்கள் நான்கு வரிசையில் அமைவதைக் காட்டும் போது காப்பியத்தில் இயற்கையும் இயற்கை இறந்த பொருள்களும் நிற உணர்வுக்குப் பின்னணி யாக அமைந்து வேறுபட்ட நிறங்கள் ஒன்றுபட்ட நிலையில் அழகுணர்ச்சியைப் பெருக்கப் பயன்படுவதைக் காண்கிறோம்.

| | |
|---|---|
| செம்மை செம்மை பசுமை கருமை | (8.45-6) |
| செம்மை வெண்மை நீலம் வெண்மை | (5.170-2) |

இந்நிலையில் நிறங்கள் பல்வேறுபட்ட பின்னணியில் அமையும்போது இயற்கை நிலை என்பது பேரளவில் பயன்படுத்தப்படுகிறது உருவகம் என்பது காப்பிய அணி நயம் பெருகுதற்கு நிற அளவிலும் அதன் இணைப்பிலும் பயன்படுத்தப் பெறுகிறது

கொற்றவை சிறப்புக் காணுமிடத்து வெண்மை தனிச்சிறப்பு உறுவதும், உணவாக்கம், காளைகள் வரிசை, நால்வருண நிலை ஆகியவற்றைக் குறிப்பிடும்போது சிலம்பில் நிறச் சிறப்பு வெளிப்படுகிறது. மற்றக் காண்டங்களைக் காட்டிலும் மதுரைக் காண்டத்தில் நிறம் பெரிதும் பயன்படுத்தப் பெறுகிறது கதை நிகழ்ச்சி, உணர்ச்சிப் பெருக்கம் ஆகியவை அடிப்படையாகக் கொண்டு இந்நிலை அமைந்துள்ளது எனலாம்.

சுருங்கக் கூறின் நிறம்பற்றிய செய்திகள் காப்பிய வளத்திற்கும் காப்பியக் குறிப்புப் பொருள் அமைப்பிற்கும் தலைமக்கள் பெருமைக்கும் கையாளப் பெற்றுள்ளன



## துணை நூல்கள் - கட்டுரைகள் :


1. சிலப்பதிகாரம், இளங்கோ அடிகள், உ வே. சா. பதிப்பு சென்னை 1948
2. Description Grammar of Cilappatikaram, S. V. Subramaniyan, Jayakumari Stores. Nagercoil, 1965.

1) நிறங்களும் இலக்கிய மரபும், ம ரா. போ. குருசாமி, வெள்ளிக் கருத்தரங்கம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை (2—1—'81).

2) சங்க இலக்கியத்தில் நிறங்கள், இரா. தமிழரசி, வெள்ளிக் கருத்தரங்கு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை (23—1—'81).

3) மாமை, பசலை - மேற்படி (30—1—'81).

4) மனோன்மணியத்தில் நிறங்களின் பயன்பாடு, ஏ. என். பெருமாள், மேற்படி (6—2—'81).

◆◆◆◆◆◆◆◆

பின்னிணைப்பு :

## சிலம்பில் நிறம் வெளிப்படல்

| சிலம்பில் காதை எண் | வெண்மை | நீலம் | பசுமை | கருமை | செம்மை |
|---|---|---|---|---|---|
| 1. | + | + | — | — | + |
| 2. | + | + | — | + | + |
| 3. | + | — | + | + | + |
| 4. | + | — | + | + | + |
| 5. | + | + | + | + | + |
| 6. | + | + | — | + | + |
| 7. | + | + | — | + | + |
| 8. | — | + | + | + | + |
| 9. | + | — | — | — | + |
| 10. | + | + | + | + | + |
| 11. | + | + | + | + | + |
| 12 | + | + | — | + | + |
| 13. | + | — | + | + | + |
| 14 | + | + | + | + | + |
| 15. | + | — | — | + | + |
| 16 | + | + | + | + | + |
| 17. | + | + | — | + | + |
| 18. | — | — | — | + | + |
| 19. | — | — | — | + | + |
| 20. | + | — | + | + | + |
| 21. | — | + | — | — | + |
| 22. | + | + | — | — | + |
| 23. | + | + | + | — | + |
| 24. | + | + | + | — | + |
| 25. | + | — | + | + | + |
| 26. | + | + | — | + | + |
| 27. | + | + | — | + | + |
| 28. | + | + | — | + | + |
| 29. | + | — | + | + | + |
| 30. | + | — | — | + | + |

# வள்ளுவன் வடித்த சின்னஞ் சிறுகதை

கம்பன் அடிப்பொடி

சிறுகதை என்றால் என்ன? அஃது எப்படி இருக்கவேண்டும்? அதன் கூறுகள் யாவை? அதற்குரிய உத்திகள் என்ன? என்பனவற்றைப் பற்றியெல்லாம் எட்கர் ஆலன் போ (Edgar Allan Poe) போன்ற மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள் இலக்கணம் வகுத்துள்ளனர். சிறுகதை என்பது மிகக் குறுகிய நேர அளவில் படித்துமுடிக்கக் கூடியதாய் இருக்கவேண்டும். ஒரு கருத்தை மையமாகக் கொண்டு ஒரு சுவையையே சித்திரிக்கவேண்டும். சொற்செட்டு மிக மிக அவசியம் என்பர்.

தமிழகத்தில் பண்டைக் காலத்தில் அத்தகு சிறுகதைகள் இருந்தனவா என்பதை இன்று நாமறியுமாறில்லை. ஆனால்,

> பாட்டிடை வைத்த குறிப்பினானும்.
> பாஇன்று எழுந்த கிளவியானும்,
> பொருள் மரபு இல்லாப்பொய்ம் மொழியானும்,
> பொருளொடு புணர்ந்த நகைமொழியானும் என்று
> உரைவகை நடையே நான்குஎனமொழிப

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் இருந்தன என்று புலப்படுகிறது.

இன்று உலகிலேயே மிகச் சிறிய கதை என்று பாராட்டப்பெறுவது ரஷ்ய நாட்டுச் சிறுகதையே! அதை முதலில் பார்க்கலாம்.

ஒரு கடல்; அங்கே ஒரு சிறு மீன்; அதை விழுங்க வருகிறது ஒரு பெரிய மீன். சின்ன மீன் அதைப் பார்த்துக் கேட்கிறது; "நீ பெரியதாய் இருப்பதால் சிறிய என்னை விழுங்க வருவது என்ன நியாயம்?" என்று. பெரிய மீன் பதில் உரைக்கிறது; "அப்படியானால் நீ என்னை விழுங்கு!" என்று.

சிறிய மீன் பெரிய மீனைச் சுற்றி சுற்றி வருகிறது. வாயால் பெரிய மீனைக் கடிக்கக் கூடி முடியவில்லை. தன் ஆற்றாமையை உணர்ந்து பெரிய மீனின் முன்வந்து "என்னால் இயலாது நீயே என்னை விழுங்கு" என்று சிறிய மீன் கூறுகிறது பெரிய மீன் அதை விழுங்கி விடுகிறது. வலிமையே நியாயம் என்பதை விளக்குவது அந்தக் கதை.

அதையும் விட மிக மிகச் சிறிய கதை ஒன்றை வள்ளுவப் பேராசான் சித்திரித்துக் காட்டுகிறார். அதை அவர் வாய் மொழியாகவே காணுமுன்னர் ஒரு சிறு விளக்கம் தருகிறேன். கதை இதுதான் :-

ஒரு மாவீரன் ; மாற்றான் படையில் ஒரு போர் யானையைத் தன் கைவேலை எறிந்து அதை வெறிகொண்டு தறிகெட்டு ஓடச்செய்து விட்டு வெற்றிப் பெருமிதமித்துடன் விண்ணாந்து திரும்புகிறான் அப்பொழுது எதிரிப்படை வீரன் இவனை மறித்து தாக்க வருகிறான் அந்தோ! கையிலிருந்த வேலை எறிந்து யானையையும் வேலையும் போக்கிவிட்டோமே ! இந்த நேரத்தில் என் செய்வது என்று கண்ணை சிறிது தாழ்த்துகிறான் அப்பொழுதுதான் தன் மார்பில் பாய்ந்துள்ள ஒரு வேலைப் பார்க்கிறான் அந்த வேலை மிக்க மகிழ்ச்சியுடன் பற்றிப் பறித்துக் கொண்டு எதிரியைப் பார்த்து " வா ; பார்க்கலாம் " என்பதுபோல வெற்றிச் செருக்கோடு நகைக்கிறானாம்

சிறுகதைக் கேற்ற, தற்கால இலக்கணத்துக் கேற்பப் பின் நிகழ்ச்சியைக் கூறாமல் விட்டு விடுகிறார் வான்புகழ் வள்ளுவர். இனி அவர் மொழியைக் கேட்போம்.

கைவேல்களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்

ஒன்பதே சொற்களில் அமைந்த அற்புதமான இதுவே உலகத்துச் சிறுகதைள் அனைத்தினும் சின்னஞ் சிறியது, இல்லையா ?



# வகுத்தான் வகுத்த வகை



டாக்டர் இ. சுந்தரமூர்த்தி
தமிழ் மொழித் துறை, சென்னைப் பல்கலைக் கழகம்

## ஊழின் ஆற்றல்

இன்ப துன்பங்கள் நம் வாழ்வில் மாறி மாறிவரும் இயல்பின. இன்பம் வந்தபோது மலரும் நெஞ்சம் துன்பமுற்றபோது வாடி வதங்குகிறது. துன்பத்திற்கான காரணத்தை ஆராய அது முனைகிறது. சில சமயங்களில் காரணம் புலப்படுகிறது. பல சமயங்களில் துன்பத்திற்கான காரணத்தை உணரவே முடிவதில்லை "யான் யாருக்குத் தீங்கு செய்தேன்? என்னை ஏன் துன்பம் தொடர்ந்து வருத்துகிறது?" எனப் புலம்பும் உள்ளத்தினராய் வருந்தும் இயல்பினர் பலர். துன்பத்திற்கான காரணம் ஏதும் புலப்படாத நிலையில் நம்மை நாமே ஆறுதல் செய்து கொள்ளப் பயன்படுத்தும் ஓர் எளிய சொல் ஊழ்விதி தெய்வம் என்ற சொல்லாலும் இதனைக் குறிப்பிடுவது அதன் ஆற்றலைக் கருதியா அன்றி அதன் காரணகாரியத்தை அறிய இயலாமையா என்பது ஆய்தற்குரியது

## நல்லூழும் தீயூழும்

வாழ்வியல் காட்டும் வள்ளுவம் அறத்துப் பாலின் இறுதி அதிகாரமாக ஊழையும், முதல் அதிகாரமாகத் தெய்வத்தையும் கூறுகிறது. எனவே தெய்வத்தையும் ஊழையும் வள்ளுவர் தனி ஆற்றல் பொருந்தியதாகக் காட்டுவதையும், தெய்வத்திற்கும் ஊழிற்குமிடையே ஏனைய பொருள்கள் கூறப்பட்டுள்ளதையும் குறிப்பாக உணரலாம் இவ்விரண்டிற்குமிடையே அனைத்தும் அடக்கம் போலும்!

கிடைக்கவேண்டிய பொருள், நாம் துய்க்கவேண்டிய பொருள், நமக்கே உரிய பொருள் நமக்குக் கிட்டாதபோது, வாழ்வின் துன்ப எல்லைக்குச் சென்றே மாய்கிறோம். ஏமாற்றம் நம் உள்ளத்தை வருத்துகிறது. ஏமாற்றத்திற்குக் காரணம் முயற்சியின்மையா? சில வேளைகளில் முயற்சிசெய்தும் ஏமாற்றம் அடைகிறோமே! என்ன காரணம்? அதுதான் ஊழா? அரிய இனிய பொருள் ஒருவனுக்கு உரிமையாய் வந்து வாய்ப்பதும், அப்பொருள் அவனுக்கு உரிமையின்றிப் போவதுமே 'ஊழ்' என்பர். சுறுசுறுப்பும் முயற்சியுமே நல்லூழ். சோம்பலும் முயற்சியின்மையுமே தீயூழ் முன்னது ஆகூழ்; பின்னது போகூழ்.

ஆவது விதிஎனின் அனைத்தும் ஆயிடும்
போவது விதிஎனின் எவையும் போகுமால்
தேவருக் காயினும் தீர்க்கத் தக்கதோ
ஏவரும் அறியொணா ஈசற் கல்லதே

என்னும் கந்தப் புராணப் பாடல் ஆகூழ் பொருளை ஆக்குவதையும், போகூழ் அதனைப் போக்குவதையும் உணர்த்தும் வள்ளுவர் ஆகூழால் அசைவின்மை தோன்றும் என்றும் போகூழால் மடிதோன்றும் என்றும் கூறுவர்.

ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி

என்பது குறட்பா.

## வாழ்வும் தாழ்வும்

பொருளை ஆக்கவும் நீக்கவும் வல்லது ஊழ் என்ற வள்ளுவர், அறிவைச் சுருக்கவும் பெருக்கவும் ஊழால் இயலும் என்கின்றார். சில வேளைகளில் பேதை மேதை ஆகிப் பெருமையுறுவதும், மேதை பேதை ஆகிச் சிறுமையுறுவதும் ஊழின் வலிமையால்தான். இதனைப் பின் வரும் வேறொரு பாடலும் நன்கு காட்டும்.

வறியவர் செல்வராவர் செல்வர்பின் வறியர்ஆவர்
சிறியவர் உயர்ந்தோர் ஆவர் உயர்ந்துளோர் சிறியர்ஆவர்
முறைமுறை நிகழும் ஈது முன்னையூழ் வினையே கண்டாய்
எரிகதிர் வழங்கு ஞாலத்து இயற்கையும் இனையதன்றோ

இப்பாடலும் ஊழின் ஆற்றலை உலகுக்கு உணர்த்துகிறது. உயிரினங்களுடைய பிறப்பும் சிறப்பும் வாழ்வும் சூழ்வும் ஊழின் வழியே நிகழ்கிறது. விலங்கு பறவைகளினும் மனிதன் உயர்ந்தவனாய்ச் சிறந்திருப்பது அறிவினாலேயாம். அந்த உயர்ந்த அறிவும் ஊழ்வயப்பட்டுள்ளது. அது காட்டக் காண்கிறது ; ஆட்ட ஆடுகிறது ; ஊட்ட உண்கிறது ; ஓட்ட ஓடுகிறது ; அதன் வழியே எல்லாம் இயங்குகிறது. வள்ளுவரும்,

பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை

என ஊழ் அறிவை ஆக்குவதையும், போக்குவதையும் சுட்டுவர்.

## அறிவின் ஆற்றலும் ஊழின் ஆற்றலும்

எல்லா உடைமைகளிலும் உயர்ந்த உடைமை அறிவுடைமை. அறிவு ஆன்ம ஒளி. அந்த அறிவு கல்வியால் சீர்மை பெற்றுக் கூர்மையோடு விளங்குகிறது. நுண்ணிய நூல்களைக் கற்றுக் கற்று எதையும் முன்னுற உணரும் ஆற்றலைப் பெற்று விளங்குகிறது. அறிவாற்றல் பெரிதா ? ஊழின் ஆற்றல் பெரிதா ?

முதிர்தரு தவமுடை முனிவர் ஆயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்

என்னும் பாடல் அருந்தவத்தோரும் அறிஞரும் விதியின்வசமாவர் என்று கூறும்.

தென் சொற்கடந்தான் வட சொற்கடற்கு எல்லை தேர்ந்த இராமபிரான், முடிதுறந்து வனம் போக நேர்ந்தபோது வெகுண்டு நின்ற இளவல் இலக்குவனுக்கு, விதியின் ஆற்றலைக் காட்டுவது இங்கு ஒப்புநோக்கற்குரியது

நதியின் பிழையன்று நறும்புன லின்மை; அற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன் பிழையன்று மைந்த
விதியின் பிழைநீ இதற்கென்னை வெகுண்டதென்றான்

என விதியின் மேலிட்டுக் கூறுவார் கம்பர். தெய்வ ஆற்றல் பொருந்திய இராமனையே 'ஊழ்' வெற்றி கண்டதெனின் ஊழின் ஆற்றலை உணர்த்தவும் வேண்டுமோ ?

பொருள் திரட்டும் நோக்கத்தோடு ஒருவன் நுட்பமான நூல் பலவற்றைக் கற்றாலும் ஊழால் உள்ளதாகிய அறிவே முன்னிற்கும். நுண்மாண் நுழைபுலமும் ஊழின் முன்னே ஆற்றல் பெறுவதில்லை. இதனையே வள்ளுவப் பெருந்தகை,

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்

என்னும் குறட்பாவால் உணர்த்துவர். உண்மை அறிவு என்பதற்கு ஈண்டுப் பரிமேலழகர் 'தன் ஊழான் ஆகிய பேதமை உணர்வு' என உரைநுட்பம் காட்டுவார்.

## இரு வேறுலகு

உலகம் பல்வேறுபட்ட ஒற்றுமை வேற்றுமைகளிடையே இயங்கிவரும் இயல்பினது. எத்தனை வேறுபாடுகள் ! ஏற்றத் தாழ்வுகளும் இயற்கை மாறுபாடுகளும் பலப்பல. செல்வச் செருக்கோடு திகழும் செல்வர்கள் ; அறிவுச் செருக்கோடு திரியும் அறிஞர்கள் ; தெளிந்த அறிவினர் ஆனால் வறிய நிலையினர் ; உயர்ந்த செல்வமுடையோர் ஆனால் கல்விச் செல்வம் பெறாத வறியர் ! இப்படி எத்தனை எத்தனையோ முரண்பாடுகள் !

பொருள்களை ஈட்டவும், காக்கவும் புகழ் புண்ணியங்களைப் பெறவும் அறிவு உறுதியாக வேண்டும் என்பர். ஆனால் அறிவு பெறாத பலரிடத்தும் பெருஞ்செல்வம் குவிகின்றதை நாம் காணுகின்றோம் நல்ல கல்வியறிவுள்ள இடத்தில் செல்வமும், செல்வம் இருக்குமிடத்தில் தெள்ளிய அறிவும் சேர்ந்திராமைக்குக் காரணம் என்ன ? இதோ ! வள்ளுவர் தரும் காரணம் இதுதான்

" இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு "

உலகத்தின் இயற்கை ஊழின் காரணமாக இருவேறு வகைப்படும் ; செல்வம் உடைவராதலும் வேறு ; அறிவுடையராதலும் வேறு.

"திருவாகன் அறிவும் அறிவாகல் திருவும்
வரல்இல் அவைவாழ் வகையான் வருவ
இருவேறு உலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு"

என இக்கருத்தையே தழுவிய இன்னிசைப் பாடலும் எண்ணுதற்குரியது.

இத்தகைய இருவேறு இயற்கை நிலையை மக்களுக்கு மட்டும் உரித்தாக்கவில்லை. கவிஞர்கள் பிறவாயாக்கைப் பெரியோனுக்கும் இத்தகைய நிலை உண்டு என்பதனைத் திருவாரூர் நான் மணிமாலை அழகுறக் கூறும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு விளங்கும் செம் மேனியம்மான் திருவுருவ நலமே இயற்கையின் இருவேறுலக நிலையைப் பெற்றிருக்கின்றதாம். உலகில் செல்வர் ஈவதும், வறியவர் இரப்பதும் இயல்பு. புரவலர் இரவலர் என்னும் இருவகை நிலைகளும் இயற்கையானவை இறைவனின் இடப்பாகம் செல்வங்களை அள்ளித் தருகின்றது. வலப்பாகம் பிச்சை எடுக்கின்றது; என்பதனை 'இருவேறு இயற்கை' எனக் கவிஞர் கூறும் பாடல் பகுதி பின்வருமாறு :

தானமாக் களிறும் மாநிதிக் குவையும்
ஏனைய பிறவும் ஈகுநர் ஈக
நலம்பாடு இன்றி நாண்துறந்து ஒரீஇ
இலம்பாடு அலைப்ப ஏற்குநர் ஏற்க
புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும் இவ்வுலகு உடைத்து
அதா அன்று
ஒரு காலத்தில் உருவமற்று ஒன்றே
இடப்பால் முப்பத்தி ரண்டறம் வளர்ப்ப
வலப்பால் இரத்தல் மாநிலத்து இன்றே
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்
கடிநகர் வைப்பினில் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிது

என்னும் பகுதியால் தெள்ளியராகவும், திருவுடையராகவும் இருப்பதற்குரிய மூல வினைகளை ஞாலமறியக் கவிஞர் விளக்குகின்றார் ஆம் ! இருவகை நிலைகளும் விதிவழியே விளைகின்றன.

## விதி விளைப்பன

விதி எதையும் விளைக்கும் தெள்ளியரை வறியராக்கும்; வெள்ளியரைச் செல்வ ராக்கும் அறிவை மடமையாக்கும் பேதையை மேதையாக்கும். இவையெல்லாம் ஊழின் அதிசய ஆற்றல்கள் ஆனால் மனிதனோ தான் கருதிய பொருளைச் செல்வத்தை அடைதற்குப் பல்லாற்றானும் முயல்கின்றான். அதற்குரியவற்றை ஆய்ந்து ஆய்ந்து பார்த்து, காலம், இடம், கருவி முதலானவற்றை நல்லனவாகத் தேர்ந்து தெளிந்து செயல்படுகின்றான். ஆனால் ஊழ் தீயதேல் இவை யாவும் தீயையாக மாறி, முடிவும் மாறாக அமைகின்றன. ஊழ் நல்லதானால் தீநாளும் நன்னாளாய் மாறுகின்றது.

நன்னலம் பயப்பதுண்டேல் தீயவும் நல்லவாகும்
சொன்னலம் இழப்பதுண்டேல் நல்லவும் தீயவாகும்
இன்னவால் வினையின் ஆக்கமெனின் இடைஏதுவான
அன்னவர் தம்மை நோவ வழக்கிலை அந்தோ அந்தோ.

எனப் பேரூர்ப் புராணமும் இதனை எடுத்துரைக்கின்றது.

பெரிய கடல்களைக் கடந்தும் நெடிய மலைகளைத் தாண்டியும் வெளிநாடுகளுக்குச் சென்றும் உள்ளம் ஊக்கிப் பொருள் சேர்க்க விழைந்தாலும் ஒருவனுக்குப் பொருள் சேர்வதில்லை வீட்டை விட்டு வெளியே செல்லாமல், ஒரு முழம் கூட அயலே செல்லாமல் அமர்ந்திருக்கும் ஒருவனுக்கும் ஆகூழ் உற்றதேல் செல்வம் வலிய வந்து சேரும் என்பதனைச் சிந்தாமணியும் அழகுறக் கூறும்,

பெருமுழங்கு திரைவரைகள் நீந்திப் பிணியுறினும்
திருமுயங்கல் இல்லையெனின் இல்லைபொருள் ஈட்டம்
ஒருமுழம் சேறலிலரேனும் பொருள் ஊர்க்கே
வரும்வழி வினாயுழந்து வாழ்கதவம் மாதோ

இத்தகைய வலியுடைய ஊழால் நல்லவை தீயவை யாகவும் தீயவை நல்லவையாகவும் மாறும். அழிக்கும் ஊழ் உற்றவிடத்துக் காலம் முதலியன நல்லனவாக இருந்தாலும் செல்வம் அழியும். ஆக்கும் ஊழ் உற்றவிடத்து அக்காலம் முதலியன தீயனவாக இருந்தாலும் செல்வம் ஆகும். வள்ளுவப் பெருந்தகை இதனை,

நல்லவை எல்லாந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு

எனக் கூறுவர்.

## நிற்றலும் நீங்கலும்

இனி அங்ஙனம் வந்த செல்வமும் நம்மிடம் நிலைத்து நிற்கின்றதா ? உள்ளம் பரிந்தும உறுதி கூர்ந்து பேணி வந்தாலும் அவ்வுரிமைப் பொருள் நம்மிடையே எப்பொழுதும் நின்றும் மகிழ்விக்கின்றதா ? இல்லையே ! ஏன் ? வாராதே வந்த மாமணி நம்மைப் பாராதே போய் விடுவதில்லையா ? செல்வம் நிலைத்து நிற்றலும், நீங்கிப் போதலும் ஊழால் ஆகுமேயன்றி மக்கள் பரிந்து காத்தலினாலும், பாராமல் இருத்தலினாலுமன்று.

பயிரினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம

என்பர் வள்ளுவப் பெருந்தகை. எனவே பொருள்களது நிலையும் போக்கும் ஊழினால் ஆவது என்பது குறளின் கருத்தாகும். இதனை உணராத நாமோ நெஞ்சம் புண்ணாகி நினைந்து நினைந்து செல்வத்தைக் காக்கின்றோம் முடிவு ; துன்பமே.

வருந்தி அழைத்தாலும் வாராத வாரா
பொருந்துவன போமினென்றால் போகா - இருந்தேங்கி
நெஞ்சம் புண்ணாக நெடுந்தூரம் தாம்நினைந்து
துஞ்சுவதே மாந்தர் தொழில்

என நல்வழியும் நமக்கு நல்வழி காட்டும்.

## வகுத்தான் வகுத்த வகை

மனித மனம் சில வேளைகளில் அறிவின் வழிச் செல்லாது ஆசை வழிச்சென்று அல்லற் படும். இது நமக்குக் கிட்டாதது என்று உணர்ந்த நிலையிலும் அன்பின் வேகத்தாலும் ஆசையின் வேகத்தாலும் மனம் தூண்ட அறிவு மயங்குகிறது ; அறநெறியை மீறுகிறது. ஆனாலும் நமக்கும் அப்பாற்பட்ட ஓர் இயற்கை நியதி, ஊழ் அதனைத் துய்க்கவிடாமற் செய்துவிடுகிறது. வள்ளுவர் இதனையே 'வகுத்தான் வகுத்த வகை' என்கின்றார்.

ஊட்டுவிப்பானும் உறங்குவிப்பானும் இங்கொ டொன்றை
மூட்டுவிப்பானும் முயங்குவிப்பானும் முயன்ற வினை
காட்டுவிப்பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப்பானும் ஒருவனுண்டே தில்லையம் பலத்தே

என்னும் பட்டினத்தடிகளின் பாடலும் இதனை வலியுறுத்துகின்றது.

## ஊழும் கூழும்

விதி வகுத்துள்ள அளவே அல்லாமல், கோடிக்கணக்கில் பொருளை ஈட்டிவைத்தவரும் அதனை அனுபவிக்க இயலாது. ஊழ் சிறந்த கல்வியும், நிறைந்த செல்வமும் இருந்தாலும் அருந்தும். ஊழ் இல்லையேல் அவன் இன்பமுறான். ஊழ் கூடவில்லையானால் நல்வாழ்வு ஏது ? சுவையான நல்ல உணவுகள் பெற்றிருக்கும் ஒருவருக்கு உடற் சுகமில்லையேல் அவ்வுணவால் பயன் ஏது ? நல்லுடல் பெற்றும் உளம் சுருங்கிப் பொருளைப் போற்றும் உள்ளத்தினருக்கு அப்பொருளால் பயன் ஏது ?

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.

என்னும் வள்ளுவரின் வாக்கு இங்கு ஊழின் நிலையை உணர்த்துகிறது.

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியும்கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன்

என்றார் ஔவையார். உழைத்துப் பொருள்சேர்த்து ஒரு சுகமும் அறியாது வாழும் மாந்தரின் வாழ்வு விதியின் வாழ்வுதானே !

## உறவும் துறவும்

உலகில் உறவுக்கும் ஊழ் வேண்டும்; துறவுக்கும் ஊழ் வேண்டும். உலகப் பொருள்களை விழைந்து போற்றாமல் யாவும் துறப்பது துறவாம். உயிர்க்கு உய்திதருகிற துறவு எவருக்கும் எளிதில் கிட்டுவதில்லை. நல்லூழ் உடையார்க்கே நலமாய்க் கூடிவரும்.

துறப்பார் மற்றுப்புரவில்லார் உறற்பால
ஊட்டாது கழியும் எனின்

என்பது குறள்

## இன்பமும் துன்பமும்

நல்வினை விளையும்போது அகமகிழ்வது மனிதன் இயல்பு தீவினை விளையும் போது மட்டும் நாம் ஏன் துன்புற்றுக் கலங்கவேண்டும்? நாம் செய்த வினைப் பயன்களே நம்மை நாடி வருகின்றன. நல்வினையை விழைவது போலவே தீவினையையும் முகமலர்ந்து ஏற்றுக்கொள்ளும் உணர்வு வேண்டும்.

நல்வினை அடைந்தகாலை நனிநிலம் திளைப்பர் நம்மை
அல்வினை அடைந்தகாலை அல்லலில் துளைவர் எல்லாம்
தொல்வினை வழியதாகும் தோன்ற னுபவங்கள் தம்தம்
புல்வினையா லென்று எண்ணல் புலமையோர் இடத்தின் நாமால்

என்ற பாடலும் இங்கு எண்ணுதற்குரியது. நல்வினைப் பயனால் இன்பமுறுதலும், அல்வினை விளைவால் துன்பமடைதலும் அறிவுடையார்க்கு அழகன்று. எதுவரினும் எதற்கும் நெஞ்சுறுதியும் மனநிலையும் எல்லார்க்கும் வாய்த்துவிடின் அமைதி அங்கே என்றும் நின்று நிலவும்

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

என்பது உலகியலுணர்ந்த வள்ளுவரின் நல்லுரையாகும்

இரகுராமன் அரச பதவியை அடைந்தபோதும், அதனை இழந்து காட்டுக்கு நடந்த போதும் ஒத்த சிந்தையாயிருந்த உளத்தினை கம்பர் சீதைவழிக் காட்டுவார்.

மெய்த்திருப் பதம் மேவென்ற போதினும்
இத்திருத் துறந்து ஏகென்ற போதினும்
சித்திரத்தின் அலர்ந்த செந் தாமரை
ஒத்திருந்த முகத்தினை யுன்னு வாள்

என்று கூறும் கம்பர் பாடல் இன்ப துன்பத்தை ஒருநிலையில் ஏற்கும் உயர்நெறியை அன்றோ எடுத்துரைக்கின்றது ஆக்கம் கேடு, வாழ்வு சாவு, இன்பம் துன்பம் இவை உலகியல்பு

என்பதை ஊழின் வழி வலியுறுத்துகின்றார் வள்ளுவர். இவ் உளநிலை மன்பதைக்கு வாய்த்து விட்டால் பின்னர் உயிர்த் துன்பம் எது? உளத் துன்பம் எது?

## விதியும் மதியும்

விதியை மதியால் வெல்ல முடியாதா? ஊழின் ஆற்றல் மனித ஆற்றலை விட வலிமை படைத்ததா? என்றெல்லாம் எண்ணங்கள் தோன்றுகின்றன. ஊழ் வலிமையானது என்பதை அற நூல்கள் எடுத்துரைக்கின்றன. சிந்தனையும் செயலும் நல்லதாக இருக்குமானால் அதுவே நல்லூழ்; தீயனவாக இருக்குமானால் தீயூழ் என்பர் சிலர். ஆற்று வெள்ளத்தில் போகும் படகு வெள்ளத்தின் போக்கில்தான் செல்லும். மனித வாழ்வும் ஊழின் போக்கில்தான் செல்கின்றது போலும்

கல்லைத் தொழுகும் மல்லற் பேரியாற்று
நீர் வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறலார்
காட்சியிற் கண்டனம்.

எனப் புறம் எடுத்துரைப்பதும் எண்ணத் தக்கது.

ஊழ் நம்முடைய வாழ்க்கைப் பயணத்தில் நம் முயற்சியையும் முந்திக்கொண்டு வந்து நிற்கும் என்கிறார் வள்ளுவர். 'ஊழை விட மிக்க வலிமையுள்ளவை வேறு எவை உள்ளன? ஊழை விலக்கும் பொருட்டு மற்றொரு வழியை ஆராய்ந்தாலும் அங்கும் தானே முன்வந்து நிற்கும் ஊழ்' என்பது வள்ளுவ வாய்மொழி

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்

உலகியலை உணர்ந்த வள்ளுவ நெஞ்சம் ஊழின் ஆற்றலை நமக்கு உணர்த்தினாலும், ஆள்வினை உடையோர் ஊழினையும் புறங்காண்பர் என்றும் கூறுவது எண்ணுதற்குரியது. 'தெய்வத்தால் இடுக்கண் வரினும் முயற்சி விடற்பாலதன்று' என்ற உரைநுட்பமும் உளங் கொளக.

உலக அறவிளக்காய் ஒளிரும் வள்ளுவம் வாழ்வின் நிலையை உள்ளவாறு உரைக்கும் சீரிய நூல். வள்ளுவ வாழ்வு வையக வாழ்வாக மலர்ந்தால் அறம் மலரும். மனித சிந்தனையின் தூய வெளிப்பாடெனத் திகழும் வள்ளுவம் வையகத்துக்கு உரியதாகட்டும்.



# அறிவுச் செல்வம் வளர்க!

[ கவியோகி சுத்தானந்த பாரதியார்

மாண்டு ராகம் - முத்தாளம்!

1 அறிவுச் செல்வம் வளர்கவே
அன்புத் தொண்டு கிளர்கவே
நிறைவுகொண்டு மனித வாழ்வு
நீண்டுயர்ந்து நிலவவே
நிலவவே - கலை - இலகவே!

2 சிந்தை செய்கை ஒன்றுபட்டு
சேர்ந்து வாழ மானிடர்
விந்தை விந்தைக் கலைவளங்கள்
வீறுகொண்டு செழிக்கவே!
செழிக்கவே - செல்வம் - கொழிக்கவே!

3 காலசக்தி வேண்டுகின்ற
கலைகளை முன்னேற்றுவோம்
ஞாலமெல்லாம் ஒன்றுகூடி
நன்மைசேர வாழுவோம்
வாழுவோம் - அன்பு - சூழுவோம்

4 வஞ்சமற்ற உள்ளமும்
வறுமையற்ற வளமையும்
கஞ்சமற்ற ஈகையும்
கருணை கொண்டு காப்பமே
காப்பமே - அறிவை - வேட்பமே!

5 காற்றைப்போல உரிமையும்
கனலைப்போல வீரமும்
ஆற்றைப்போல அருளுடன்
ஆழிபோல வாழுவோம்
வாழுவோம் - நண்பர் - சூழவே!

6 உலகு போற்ற நிலவுவோம்
உண்மை வண்மை குலவுவோம்
இலகும் ஆண்பெண் இதயத்துடிப்பில்
இலகும் இறைவன் ஆடவே
ஆடவே – அருட்சோதி – கூடவே !

7 மின்முனைகள் கூடிக் குழைந்து
மிளிர் வியன்கள் போலவே
அன்பும் அறிவும் அருளுங்கூடி
ஆன்மநேயம் பெருகவே
பெருகவே - நெஞ்சம் - உருகவே !

பெங்களூரின் தமிழ்ச் சங்கம்
பெரிய பெரிய கனவுடன்
செங்கதிர் விரித்துக் கோடிச்
சிந்தை மலர்கள் பயக்கவே
பயக்கவே - உலகு - வியக்கவே
இணைக்கவே - இன்பம் - மணக்கவே !



# சிட்டுக் குருவியா ............... சாலை இளந்திரையன்.

விச்விச் என்று இசைபாடிக்கொண்டு
விண்ணில் எழுந்தது சிட்டுக்குருவி :
நின்று கவனித்தேன் —
நெஞ்சில் அதன் ஓவியம் வரைந்துகொண்டேன்:
'எவ்வளவு இன்பமான வாழ்க்கை. ! —
ஏக்கக் கறுப்பு என் இதயத்தில் மேகமிட்டது . .
அடுத்த சில விநாடிகளில்
சர் என்று திரும்பி வந்தது சிட்டு;—
தனது சின்னஞ் சிறிய கூட்டுக்குள்ளே
ஒடுங்கி நெளிந்து நுழைந்துகொண்டது...

என் மனமேக இருட்டை உடைத்து
எழுந்து விரிந்தது எண்ணச் சுடர்ச்சி:
'சிறிது நேரம் பறப்பதுதான் வானிலா ?
அதன் பிறகு அடங்குவது
இத்தனூண்டு இக்குனி விட்டிலேதானா ?
வாழும் இடத்தை இடுமுடுக்காக்கி,
ஏதோ சிறிது நேரம் மட்டும்
எழுந்து பறந்து மீண்டும் முடங்கும்
குருவியைப் பார்த்தா ஏங்கிப் போனேன் . ?
சிச்சீ,
எவ்வளவு சிறுத்துப் போயிற்று என் நெஞ்சம் !'
அறிவியப் புதுக்குரல் அகத்தே கேட்டது :
'வாழ்க்கை என்பது வானமளாவியது ;
மானுடன் என்பவன்
அந்த வாழ்வின் அழகியல் நாயகன் !
நின்றாலும் பெரிதாக நிற்பான்;
நடந்தாலும் பெரிதாக நடப்பான் ;
இருந்தாலும் பெரிதாக இருப்பான். —
ஏன் ஏன், — விழுந்தாலும் பெரிதாயே விழுவான் —
இவன்தான் ஆறு அறிவு படைத்த மானுடன் !

இந்தப் பெரிய ஏற்றம் படைத்தவன்
ஈரறிவு மூவறிவு நாலறிவு உயிர்களின்
இக்குனி ஆனந்த முக்குமுடக்கைப்
பெரிதென எண்ணி வியந்து நிற்பதோ ?
'' இல்லையே எனக்கு அது " என்று
ஏங்கி ஏங்கிச் சாம்புவதோ இவன். !

சென்ற தடத்திலேயே திரும்பிவரும்
அந்தக் குருவியின் அளவுபட்ட வாழ்வுக்கு
அடிமனத்து ஒருதுளி இரக்கம் கொண்டேன் ;
எந்தத் தடமும் பின்னால் கிடக்க
எழுந்து எழுந்து எழுந்து எழுந்து
புதுத்தடம் போட்டு மேன்மேல் செல்லும்
மானுட நடைக்கு ஓர்மகிழ்மலர் எடுத்தேன் !
விட்டு முகப்பில் விச்விச் குருவி
பழைய தடத்தையே பார்த்துக்கொண்டு இருந்தது !
என்றன் உள்ளமோ எதிர்காலமாகிய
எழுகோடி வானங்கள் அளாவியே விரிந்தது :

# தமிழ்ப்புகழ்

அகமெனவாகி புறமெனஆகி
அழகெனஆகி
அருளாகி
சுகமெனஆகி சதியெனஆகி
சுவையெனஆகி
சுடராகி

மணியெனஆகி அணியெனஆகி
மலையெனஆகி
மலராகி
கனியெனஆகி கதியெனஆகி
கலையெனஆகி
கடலாகி

பயிர்எனவாகி பயன்எனவாகி
பலம்எனவாகி
படையாகி
உயிர்எனவாகி உணர்வெனஆகி
ஒளிஆகி உறவாகி
உறவாகி

அமுதெனஆகி அறிவெனவாகி
அதிசயம்ஆகி
அறிவாகி
தமிழெனவாகி தரைதனையாளும்
தனிமொழிவாழி
புவிமீதே.

கவியரசு இளங்கம்பன், பழனி



# கூவாய் கருங்குயிலே !

தெள்ளிய தேனும் தித்திக்கும் வானமுதும்
உள்ளம் இனிக்க ஊறிவரும் கற்பனையும்
துள்ளி வருந்தென்றல் தூய்தமிழும் எல்லாம்
கொள்கைக் குறளென்று கூவாய் கருங்குயிலே !

இருளை ஒழிப்பதற்கும் இன்பத் தமிழினத்தார்
அருளே நெறியாக ஆட்சி புரிவதற்கும்
பொருளை உணர்ந்து புகழை நிறுத்துதற்கும்
குறளே முரசென்று கூவாய் கருங்குயிலே !

நற்றமிழர் வாழ்வும் நாடும் விளக்கமுற
வெற்றரவம் ஒய்ந்து வினைத்தூய்மை செப்பமுற
கற்றவர்கள் என்றும் கைக்கொள்ளும் மாமருந்து
கொற்றக் குறளென்று கூவாய் கருங்குயிலே !

— கவிஞர் முருகுசுந்தரம்.

# கவிதை



நம் கவிதைகள்
பாறை விதைகளாக
பயனற்று போகக்கூடாது

சிந்தனை யுகத்தின்
சீர்திருத்த புயலென
நெருப்புப் பொறியின்
கருத்துக் குவியலாய்
கவிதைகள் வேண்டும்

சரித்திர ஆற்றில்
எதிர் நீச்சல்
போடாததுகள்
கழிவுக்கடலில்
சங்கமமாகி விடுகின்றன.

அதனால்
நம் படைப்புகள்
மனிதங்களின்
மனதில்
சம்மட்டியாக
அடிக்க வேண்டும்

சமத்துவ வாழ்வின்
சரித்திரப் படிகளாய்
விஸ்வ ருபம்
எடுக்க வேண்டும்

கவிதைகள்
பெறும்
வார்த்தை ஜாலங்கள்
அல்ல,
சமுதாயத்தைக் குத்தி
அதன் அறிவை
குணப்படுத்தும்
சொல்லீட்டிகள்

எஸ். ஆரோக்கியநாதன் U.S.A.

# கர்னாடகத்தில் தமிழ் வளர
# பெங்களூர்த் தமிழ்ச் சங்கத்தின் அரிய பணி

முச்சங்கம் கண்ட பெருமை மதுரைக்கு உண்டு. ஆயின் தற்காலத்தில் தமிழ்ச் சங்கம் கண்ட பெருமை கர்னாடகத்திற்கே உண்டு. பூங்கா நகரமான பெங்களூரில் நடுப்பகுதியில் இயற்கை அழகே உருவாக வியாபித்து பரவி காட்சி தருவது அலசூர் ஏரி இதையொட்டி அமைந்திருப்பதுதான் பெங்களூர்த் தமிழ்ச் சங்கம்.

தமிழ்ச் சங்கம் கட்டிடத்தின் முகப்பு பார்வைக்கு பிரமிப்பு தருவதாக உள்ளது. அண்டை மாநிலத்தில் தமிழச் சங்கத்திற்கு இவ்வளவு பெரிய கட்டிடம் என்பது வியப்புத்தருவது ஆகும். கட்டிட உருவம் வெளி பார்வைக்கு 4 மாடி கட்டிடம்போல் காட்சி தருகிறது. கல்கத்தா, பம்பாய், டெல்லி போன்ற இடங்களில் தமிழ்ச் சங்கங்கள் இருந்தாலும்கூட இவைகளில் இருந்து தன்னை ரொம்பவும் வித்தியாசப் படுத்திக்கொண்டு 30 ஆண்டுகளாக தழைத்து நிற்கும் பெருமையுடன் தலை நிமிர்ந்து காட்சி தருகிறது பெங்களூர்த் தமிழ்ச்சங்கம். தமிழ் ஆர்வம் உடைய அனைவரும் சங்கத்தின் உறுப்பினராகலாம் என்ற எளிய விதிக்கும் இணங்க தமிழர் அல்லாதோர் உட்பட சுமார் 1500 உறுப்பினர்கள் இச்சங்கத்தில் உள்ளனர்.

தமிழக மற்றும் கர்னாடக முன்னாள் அமைச்சர்கள் மத்திய அரசு மற்றும் தமிழ் ஆர்வலர்கள் உதவியுடன் பல லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள பிரமாண்டமான தமிழ்ச் சங்கக் கட்டிடம் 1974-ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது.

இச்சங்கக் கட்டிடத்தில் எல்லா தமிழருக்கும் உரிமை இருக்கவேண்டும் என்ற எண்ணத்தில் தலைக்கொரு ரூபாய் வீதம் ரூ 25 ஆயிரம் நிதி திரட்டி இக்கட்டிட நிதியில் சேர்க்கப் பட்டுள்ளது. தமிழ்ச் சங்கத்திற்கென்று அழகிய கலையரங்கு ஒன்று உள்ளது. இவ்வரங்கு அடிக்கடி விழா மயமாக ஏதேனும் விழாக்களை கண்டுகொண்டே இருக்கும். தங்கள் சங்க உபயோகத்திற்கு மட்டுமின்றி வெளியார்களின் தகுந்த நிகழ்ச்சிக்கும் தமிழ்ச் சங்க அரங்கை தந்து உதவுகின்றனர். இது மாலை நேரங்களில் கல்லூரியாக பயன்படுகிறது. இங்கு பலவேறு வகுப்புக்கள் நடத்தப்படுகின்றன. ஒவ்வொரு வகுப்புக்கும் தனி அறைகள் உள்ளன. விருந்தினர்களுக்கென்று தனி அறை ஒன்றும் உள்ளது. தமிழர் அல்லாதார்க்கான தமிழ் மொழி வகுப்பு, கன்னடர் அல்லாதார்க்கான கன்னட மொழி வகுப்பு, கராத்தே, யோகாசனம், இசை, தையல் பயிற்சி, புலவர் வகுப்பு முதலியன இங்கு நடைபெறுகிறது.

தமிழ் மொழி வளர்ச்சியே மட்டுமின்றி கன்னடர் – தமிழர் உறவை வலுப்படுத்தும் பணியையும் இச்சங்கம் செய்துவருகிறது. அரசியல், மொழி, இனவேறுபாடின்றி இது இயங்கி வருகிறது.

கன்னடர் அல்லாதவருக்காக கன்னட மொழி வகுப்பு நடத்தி கன்னட மொழிக் கற்றுத் தருவது இதன் சிறப்பான பணியாகும் இதில் 350 பேர் படித்து வருகின்றனர். 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கன்னட தெய்வநெறி ஞானியான "பசவண்ணரின்" பாடல்களை

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளனர். அதே போல் கன்னட அறிஞர் “சர்வக்ஞரின்” கவிதைகளையும் தமிழ் மொழியாக்கம் செய்து வெளியிட்டுள்ளனர்.

தமிழ் மொழிக்கு இச்சங்கம் பல விழாக்களைக் கண்டபொழுதிலும் படைப்பிலக்கிய முயற்சியில் ஆர்வம் காட்டாதது வருந்தத்தக்க ஒன்றாகும்

ஆண்டுக்கொரு முறை தமிழ் மாநாடு நடத்துகின்றனர். இதில் பல தமிழறிஞர்கள் பங்கு கொள்கின்றனர். அவ்வப்பொழுது பட்டி மன்றம், கருத்தரங்கம், கவியரங்கம், நாடகம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர். தவத்திரு அடிகளார் உரை எழுதிய “திருக்குறள் நூறு”, “மறைமலை அடிகளார் பற்றி கட்டுரை” என்ற நூல்களை வெளியிட்டுள்ளனர். இதைத் தவிர “ஊற்று” என்ற மெல்லிதான மாத இதழ் ஒன்றையும் நடத்தி வருகின்றனர். ஒரு பிரமாண்டமான பொதுநூலகத்தை இச்சங்கம் தன்னகத்தே பெற்றுள்ளது. சங்க உறுப்பினர் மட்டுமின்றி ஏனையோரும் இந்த நூலகத்தை பயன்படுத்திக்கொள்ள வசதி செய்யப்பட்டுள்ளது. இதில் தமிழ், கன்னடம், இந்தி ஆங்கில மொழி நூல்கள் உள்ளன.

தற்காலத்தில் பிரசித்திபெற்ற கராத்தே பயிற்சி கற்றுத்தர இங்கு விரிவான எற்பாடு செய்யப்பட்டுள்ளது. இருபாலருமாக 150 பேர் இங்கு பயின்று வருகின்றனர்

கராத்தே கற்று அடிதடி தகராறில் ஈடுபடுவதில்லை என்ற உறுதிமொழியுடன் இங்கு மாணவர்களை சேர்க்கின்றனர். பெண்களின் தற்காப்பு கருதி இங்கு பெண்களுக்கு இலவசமாக கராத்தே கற்றுத் தருகின்றனர்.

ஆர்வத்துடன் பணிபுரியும் நிர்வாகிகளால் இச்சங்கம் மென்மேலும் வளர்ச்சி அடைந்து வருகிறது.

—தினமலர் *11-12-1980*



# PROMOTING NATIONAL INTEGRATION

By S. NATARAJAN

THE BANGALORE TAMIL SANGAM has its letterhead in Kannada. This reflects the broad outlook that has informed its activities in strengthening the age-old ties between Kannadigas and Tamilians. The Sangam provides a common platform for Tamil and Kannada scholars to come together.

And now in welcoming the historic decision of the Karnataka Government in making Kannada the official language from Rajyotsava Day, the Sangam has proved that it is second to none in its loyalty to the interests of Karnataka.

It also conducts Kannada Classes for youngsters, businessmen, servicemen, and officials In 1962, free Kannada classes with the blessings of the then Education Minister S. R. Kanti were inaugurated at the Sangam.

Kannada and Tamil have been linked together from time immemorial. The Sangam poets (5th century BC to second century AD) not only sang the praise of Tamil princes but of the Karnataka region also. Both literatures had a leading role in spreading the Bhakti movement.

Former Director of Youth Services Joginder Singh had his Kannada Lessons in the sangam. It has trained more than 3000 students during the last 17 years. With two classes a week it has 200 students on its rolls under three teachers. Though the State Government is yet to recognise this course the authorities have sanctioned a grant of Rs. 100 a month to the sangam from January 1979

The sangam promotes national integration by teaching Tamil to the non-Tamilians. The Director of Kannada and culture, Mr. Aniruddha Desai, recently visited the sangam and appreciated its activities. It has honoured Kannada scholars on various occasions.

Tamil sangams are functioning in major towns, Shimoga, Hiriyur, Chickmagalur, Bhadravati, Mangalore and Mysore in the State.

The Bangalore Tamil Sangam made its humble beginning in the Cubbon Park when five Tamil lovers started a study circle on January 1, 1950. With two more joining the group, it took up literary activities.

Inspired by the activities of the sangams in the capital and other metropolitan cities, the local group decided in 1958 to posses a building in the City.

In 1960, a building fund committee headed by the founder member and the present President, Mr. K. Subramaniyam, was set up. Besides the Central, the State and the Tamil Nadu Governments, Kannada and Tamil lovers were approached for generous help.

In January 1967, the land facing the Ulsoor lake on the Annaswamy Mudaliar Road was purchased. SEPT. 30 IS A RED LETTER DAY in the history of the sangam as on this day 12 years ago the foundation for the ground floor was laid by the then Karnataka Chief Minister Nijalingappa.

On April 3, 1970 the ground floor accommodating the auditorium and seminar hall was opened by former Chief Minister Veerendra Patil.

In 1972, plans for locating a reading room and a library in the first floor took shape. The last instalment of Rs 25,000 of the Central Goverment aid came handy in realising this dream. In 1974, the corner-stone for the library was laid in the presence of Kannada scholar Masti Venkatesa Iyengar and Tamil Nadu former Chief Minister M. Karunanidhi gave Rs. 50,000 from his birthday fund.

It is thus evident that leaders of Karnataka had taken part in every stage of its development The Sangam has women and youth wings under its umbrella.

Its library has more than 5000 books in Kannada, Tamil, Hindi and English. Many foreign embassies have donated books. Recently, a retired teacher and founder of the Venkatesa Education Society, Mr. M. V. Jayaraman, donated Rs. 8,500 for equipping the library.

The youth wing devotes its attention to symposia, literary activities and also helps in tapping histrionic talents. The Rajyotsava Day is followed by drama competitions. Renowned stage artistes, the late Mr. A. V. Meiyappa Chettiar and others have donated rolling shields to the talented artistes.

The women's wing teaches tailoring, cooking and interior decorations, Music - Veena, vocal - and dance classes are also run. Mr. Basavaraj Adagoor of Tumkur takes the vocal and Mr. C. Radhakrishnan, grandson of Bangalore Nagarathnamma, conducts dance classes.

In addition, Tamil pandits are engaged in translation work and an humble beginning in translating Sarvagna vachanas into Tamil has been made. A committee is translating the " Adiyuthamma Sanna Kadaigal " published by the Kannada Sahitya Parishad. Tamil Examinations for the VII standard, SSLC and PUC students are also conducted.

Ootru (Spring) a monthly magazine, to propogate the cultural and literary ideals is also published with public aid.

The sangam has plans to build the second storey to help research and translation work and provide rooms for guests. It has also proposals to build a school, hostel, a marriage hall and an orphanage.

Attempts to instal the Tiruvalluvar statue on a pedestal in the Ulsoor lake have notsucceeded so far. The office-bearers are again making an appeal to the City Corpora tion to accord permission for installing the statue.

- *DECCAN HERALD*, *27-9-1979.*

## நமது நூலகத்திற்கு புத்தகங்கள் விற்பனை செய்த பதிப்பகத்தார்

நாவலர் பதிப்பகம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
மாணிவாசகர் நூலகம்
காவியா
லேனா
ஸ்ரீ சபரி ஏஜென்ஸிஸ்
நர்மதா பதிப்பகம்
கலைஞர் பதிப்பகம்
அருணோதயம்
பூம்புகார் பிரசுரம்
மறைமலையடிகள் நூலகம்
பழனியப்பா பிரதர்ஸ்
வானதி பதிப்பகம்
ஸ்ரீ இரமகிருஷ்ணா மத்
பாரி நிலையம்
காமதேனு பிரசுரம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
மருதமலையான் பதிப்பகம்
அமுத நிலையம்
தஞ்சை (சரஸ்வதி மகாராஜா) சரஸ்வதி மகால் நூலகம்
ஞான சம்பந்தர் பதிப்பகம்
காந்தளகம்
கலைக்கதிர் பிரசுரம்
கஸ்தூர்பா காந்தி பிரசுரம்
சாகித்திய அகாதமி பிரசுரம்
பாலாஜி பிரசுரம்
ஸ்டார் பப்ளிகேஷன்ஸ்
மதுரா காமராஜர் பல்கலைக் கழகம்
அண்ணாமலை பல்கலைக் கழகம்
தேன்தமிழ் பதிப்பகம்
மணிமேகலை பிரசுரம்
சேகர் பதிப்பகம்
சுத்தானந்தா நூலகம்
குமர குருபரன் சங்கம்
The International Journal of Dravidian Linguistics
Central Institute of Indian Languages
Higgin Bothams
20th Conf. & Seminar of Tamil Studies

# சங்க வளர்ச்சி

தோற்றம் : 1950 இல் படிப்புக்குழுவாக
விரிவு : 1958 இல் பெங்களூர்த் தமிழ்ச் சங்கம் என்ற பெயரில் மலர்ந்தது
பதிவு : 1960 இல் தமிழ்மொழி, கலை, பண்பாடு பேணுதல்

## சங்க வரலாற்றில் சில நாட்கள்

| | |
|---|---|
| 22-9-59 | மாணவர்க்குத் தமிழ்த் தேர்வுத் தொடக்கம் |
| 26-10-62 | கன்னட வகுப்புத் தொடக்கம் |
| 15-1-64 | பாரி தமிழ் மன்ற இணைப்பு |
| 12-12-64 | தமிழ்ச் சங்கத்துக்கு $2\frac{1}{2}$ ஏக்கர் நிலக்கொடை |
| 23-1-67 | ரூ 44,253 விலையில் மனை வாங்கல் |
| 30-9-67 | தரைக் கட்டிடக் கால்கோள் |
| 3-3-70 | தரைக் கட்டிடத் திறப்பு |
| 27-5-74 | முதல்மாடிக்கு மூலைக்கல் நாட்டல் |
| 14-3-75 | வெள்ளிவிழாத் தொடக்கம் |
| 16-3-75 | முதல் மாடிக் கட்டிடத் திறப்பு |
| 1977 | திரு. தியாகராசன் ரூ, 1,000 வைப்புநிதி வழங்கல் |
| 22-10-78 | கன்னட ஆசிரியர் சேஷப்பாவுக்குப் பணமுடிப்பு |
| 14-1-79 | திருவள்ளுவர் விழா |
| 20-7-79 | ரூ. 3,000 பொற்கிழிப் பரிசு |
| 27-7-79 | எம். வி. ஜெயராமன் ரூ. 8,500 வழங்கல் |
| 20-1-80 | சங்க நாட்டிய மாணவியின் முதல் அரங்கேற்றம் |
| 10-2-80 | கன்னடத் தேர்வு தொடக்கம் |
| 20-2-80 | நூலகத்துக்கு மைய அரசு ரூ. 20,000 உதவி |
| 15-3-80 | தமிழ்ச்சங்கம் நடத்திய முதல் தமிழ் இலக்கிய மாநாடு |
| 17-3-80 | திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் ரூ. 1,000 வைப்பு நிதி |
| 17-3-80 | திரு சி. திருநாவுக்கரசு, ரூ. 1,000 வைப்புநிதி |
| 1980 | 500 இரும்பு நாற்காலிகள் வாங்கல் |
| 1980 | முதல்மாடிக் கட்டிடத்துக்கு 12 மின் விசிறிகள், நூலகக் கதவு பொருத்தல். திரு. ஜே. கே. நாராயணன், ஜே. கே. சிங்கார வேல் ரூ 10,000 சு. நீலவேணி ரூ 4,000 நன்கொடை. தமிழ் தட்டெழுத்துப் பொறி, சுழற்றச்சு வாங்கல் |
| 13-3-80 | சங்க விருந்தினர் அறைக்கு மேசை நாற்காலிகள் |
| 1980 | ரூ 20,000க்கு நூற்பேழைகள். ரூ. 30,000 க்கு மேல் நூலகத்துக்கு நூல்கள் |
| 14-3-81 | திரு சு. நீலவேணி சுந்தர மூர்த்தி அறக்கட்டளை சார்பில் ரூ 8,000 நன்கொடை |
| 22-3-81 | தமிழக அரசு கல்வித்துறை 205 தமிழ்நூல்கள் நன்கொடை. |

Printed At: R. S. PRINTERS, 52, Lakshmana Mudaliar Street, Bangalore-560001

